# மீனாவுக்கு ஜெமெட்ரி வேப்பங்காயாய் இருந்தது

ஜாமெட்ரியைப்போல அத்தனை அலுப்பையும் சலிப்பையும் அவளுக்கு வேறு எதுவும் தந்ததில்லை.

அவளுக்கு அதில் உற்சாகமேயில்லை. அந்தக் கோணங்கள், முக்கோணங்கள், நாற்கோணங்கள், அந்த பாரலலோகிராம், அந்த ஹெக்ஸாகான்... எல்லாமே அவளுக்கு சுமையாய் இருந்தன.

ஒருநாள் அபூர்வமாக ஒரு நிகழ்ச்சி நடந்தது. அவளுடைய அண்ணன் ராஜு அவளுக்காக அழகான, ஆரஞ்சு நிற வெள்ளி போல மின்னும் ஒரு காம்பஸ் பாக்ஸ் வாங்கினான்.

அந்த பாக்ஸும் அதன் கருவிகளும் மீனாவுக்கு மிகவும் பிடித்துவிட்டன. அன்றிரவு முக்கோணத்தில் ஏறுவது போலவும், வட்டத்துள் சுழல்வது போலவும், சட்டத்தில் ஆடுவது போலவும் அவள் கனவு கண்டாள். எவ்வளவு வேடிக்கையாய் இருந்தது!

இப்போது அவளுக்கு ஜெமெட்ரி, ஹெக்ஸாகான், மற்றும் பரலலோகிராம் எல்லாம் மிகவும் பிடித்துவிட்டன.

அதன்பிறகு மீனாவுக்கு ஜாமெட்ரி என்றால் உயிர். வியப்புதான். ஆனால் அது உண்மையல்லவா?







## கேமல்

இன்ஸ்ட்ருமென்ட் பாக்ஸ்






கேம்லின் பிரை
லிமிடெட்,
கலைப்பொருள் பிரிவு,
ஜெ.பி. நகர்
பம்பாய்-400 059



கேம்லின் அன்பிரேக்கபிள் பென்சில்கள்
தயாரிப்பவர்களிடமிருந்து

VISION 794 TAM

**Results of Chandamama—Camlin Colouring Contest No. 14 (Tamil)**

*1st Prize:* N. Vasanthi, Kumbakonam. *2nd Prize:* P. A. D. Jayanthi, Salem-3. *3rd Prize:* P. Sridhar, Madurai-14. *Consolation Prizes:* S. Manikantan, Dombivli (East); D. Rajani, Madras-86; P. Gandhi Mathi, Coimbatore-2; K. Santosh, Visakhapatnam-1; K. Bhuvaneswari Devi, Coimbatore-4.

# ஃப்ளாஷ் சிறப்பிலே புன்னகை பரப்புக

**புத்துணர்ச்சி தளும்பும் புன்னகையின்
உன்னத இரகசியங்கள்.**

**ஃப்ளாஷ் புதுமலர்ச்சி...**
ஃப்ளாஷ் — அதிலுள்ள
நீலநிறத் துலக்கி,
வீச்சமான வாய் மூச்சை
விலக்குகிறது.
பற்சிதையூட்டும் கிருமிகளை
ஒழிக்கிறது.
**ஃப்ளாஷ் தன்னம்பிக்கை...**
பல், ஈறு . . . ஏன் வாய்
முழுவதுமே பராமரிப்பதற்
கான அனைத்தும்
அடங்கியது என்ற
உணர்வே அதன் உறுதி.
**ஃப்ளாஷ் ருசி...**
கி . . . கி . . . 'கிளு கிளு'
உணர்ச்சி, பல் துலக்கத்
துலக்க மகிழ்ச்சி.




**ஃப்ளாஷ்**
டூத் பேஸ்ட்



**புத்துணர்வூட்டும் வான்நீல வண்ண வாய்துலக்கி.**

everest/80/FL/294-TM

# கண்ணை மூடிக்கொள்
# ஆசையை நினைத்துக்கொள்



ஆசைகள் பூர்த்தியடைய முன்னேற்பாடு அவசியம். உன்னுடைய ஆசை என்ன ? புதிய பொம்மையா, பொம்மை வீடா, சைக்கிளா ? உன்னுடைய சொந்த பணத்திலேயே இவைகளையெல்லாம் வாங்க முடியும். எப்படி ?

உனக்காகவே கனரா பாங்க் ஏற்படுத்தியுள்ள '**பாலக்ஷேமா**' டெபாசிட் திட்டத்தில் இன்றே சேமிக்க ஆரம்பிப்பதால். அவ்வப்பொழுது கிடைக்கும் சில்லறைகளை அழகான **பாலக்ஷேமா** சேமிப்புப் பெட்டியில் போட்டு வை. பெட்டி நிறைய, நிறைய பணத்தை அருகில் உள்ள கனரா பாங்கில் உன் கணக்கில் போட்டுக் கொண்டேயிருக்கலாம். நீ ஆசைப்பட்டதை வாங்குகிற அளவிற்கு பணம் வளர்ந்து கொண்டேயிருக்கும் — காரணம், பாங்கு வட்டியும் சேருகிறது.

உன்னுடைய ஆசைகள் நிறைவேற எவ்வளவு சுலபமான வழி ! சேமிக்கப் பழகுவதற்கு எவ்வளவு அற்புதமான முறை !

மற்ற விவரங்களுக்கு அருகாமையிலுள்ள கனரா பாங்கில் இன்றே தெரிந்துகொள்.

மற்ற டெபாசிட் திட்டங்கள் : **காமதேனு, நித்யநிதி, நிரந்தரா.**

## பாலக்ஷேமா டெபாசிட்




## கனரா பாங்க்

(தேசியமாக்கப்பட்ட பாங்க்)
நாடெங்கிலும் 1200க்கும் மேற்பட்ட கிளைகள் உள்ளன.





# அம்புலிமாமா

நிறுவனர் : 'சக்கரபாணி'
நிர்வாக ஆசிரியர் : நாகிரெட்டி



வந்த விருந்தாளிகளை உபசரித்து அனுப்பி வரப்போகும் விருந்தாளிகளை உபசரிக்கத் தயாராக இருப்பவன் தேவர்களை விட உயர்ந்தவன் என்பதை வள்ளுவர் இக் குறளில் கூறுகிறார்.

**செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்.**
**நல் விருந்து வானத்தவர்க்கு.**

இத்தகைய உயரிய பண்பை நாமும் பெறுவோமாக.

நல்லவர்களுக்குக் கூட கெட்டவர்களின் சேர்க்கையால் கேடு விளையும், குளிர்ந்த நல்ல தண்ணீர் நெருப்பினால் சுடப்பட்டதும் தன் குணங்களை இழந்து விடுகிறதல்லவா! இதை இந்த சுலோகம் எடுத்துக் கூறுகிறது.

**அசஜ்ஜனேன சம்பர்க்காத் அனயம் யாந்தி சாதவஹ**
**மதுரம் சீதளம் தோயம் பாவகம் ப்ராப்ய நிர்குணம்**

கெட்டவர்களின் சேர்க்கை எவ்வளவு மோசமானது என்பதைத்தான் இந்த வடமொழிச் செய்யுள் நமக்கு நன்கு அறிவுறுத்துகிறது.



மதிமுகம் : 67 ஆகஸ்டு 1980 புன்னகை : 2

தனிப் பிரதி : ரூ. 1-50 வருட சந்தா : ரூ. 18-00




**டி. வாசு, ஹைதராபாத்.**

கேள்வி: விண்வெளியில் அனுப்பப்படும் செயற்கை கிருகங்களும் ராக்கெட்களும் ஒன்றோடு ஒன்று மோதிக் கொள்ளாதா? அவற்றில் மனிதர்கள் இருக்கிறார்களா? அவை தம் வேலை முடிந்ததும் என்ன ஆகின்றன?

பதில்: செயற்கை கிரகங்கள் சாதாரணமாக ஒன்றோடு ஒன்று மோதுவது இல்லை. இவை செலுத்தப்படும் வேகம், நேரம் வெவ்வேறாக இருப்பதால் தான் இப்படி மோதுவது தவிர்க்கப்படுகிறது. இவை செலுத்தப்படும் வேகத்தைப் பொறுத்து பூமியையோ சந்திரனையோ சுற்றும். இந்த கிரகங்கள் எப்போதும் சந்திரனைச் சுற்றிக் கொண்டிருக்குமாறு அனுப்பப்படுவதில்லை.

சந்திரனின் ஈர்ப்பையும் தாண்டிச் செல்லும் ராக்கெட்கள் சூரியனைச் சுற்றும். அவை என்ன ஆகின்றன எனக் கூற முடியாது. விஞ்ஞானிகள் இரண்டு செயற்கை கிரகங்கள் சந்திக்குமாறு ஏற்பாடுகள் செய்து வருகிறார்கள் எனச் செய்திகளை நாம் படிக்கிறோம். அப்படி செயற்கை கிரகங்கள் தாமாகவே ஒன்றுக்கு ஒன்று சந்தித்து விடுவதில்லை. இதற்காகச் சிறப்பான பல ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கும். இந்த செயற்கை கிரகங்களில் மனிதர்கள் செல்ல வசதி செய்யப்பட்டிருக்கும். இவர்கள் உள்ளே இருந்து கிரகங்கள் சந்திக்கும்படிச் செய்வார்கள். இவர்கள் இயக்கியே செயற்கை கிரகங்கள் ஒன்றை ஒன்று சந்திக்கின்றன.

சந்திர மண்டலத்திற்குக் கூட மனிதர்கள் இவ்விதம் போய்த் திரும்பி வந்திருக்கிறார்கள். செயற்கை கிரகங்களில் மனிதர்கள் இருந்து அவை செயலாற்றி முடிந்தால் பூமிக்குத் திரும்பிவரும் ஏற்பாடுகள் செய்யப்பட்டே இருக்கும். அப்படி இல்லாத கிரகங்களை அப்படியே அந்தரத்தில் விட்டு விடுவார்கள். அவை எரிந்து சாம்பலாகி விடும். மிகப் பெரிய செயற்கை கிரகங்களானால் நாளடைவில் அவற்றின் பகுதிகள் பிரிந்து ஸ்கைலாப் போல பூமியின் மீது வந்து விழலாம். இந்த செயற்கை கிரகங்களின் வேகம் குறையும் போது இப்படி ஏற்படுகிறது.




**கா**சியில் கர்ப்பூரபடகன் என்ற சலவைத் தொழிலாளி இருந்தான். அவனிடம் ஒரு நாயும் ஒரு கழுதையும் இருந்தன. ஒரு நாள் இரவு அவன் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தபோது ஒரு திருடன் அங்கு வந்தான்,

அப்போது கழுதை நாயிடம் ''நண்பா, நீ குரைத்து நம் எஜமானனை எழுப்பு'' என்றது. நாயோ ''நீ என் வேலையைப் பற்றிச் சொல்ல வேண்டாம். அதை நானே செய்ய வேண்டிய போது செய்வேன். முன்பெல்லாம் மிகவும் விசுவாசத்துடன் உழைத்தேன். அதனால் சுகம் அடைந்த நம் எஜமானன் என்னை இப்போதெல்லாம் மறந்து விட்டான். எனக்கு இப்போது சரியாகச் சாப்பாடு கூடப் போடுவதில்லை. ஆபத்து வரும் வரை எஜமானர்கள் தம் ஊழியர்களைப் பற்றிக் கவலைப்படுவது இல்லை. இன்று வந்துள்ள திருடன் கொஞ்சம் திருடிக்கொண்டு போகட்டும். அப்போது தான் நம் எஜமானனுக்கு என் மதிப்பு தெரியும். எனக்கும் வயிறு நிறைய உணவு கொடுப்பான்'' என்றது.

கழுதையோ ''இது தவறு. நீ உன் தன் நலத்திற்காகக் கடமையை மறக்கிறாயே'' என்றது. நாயோ ''எஜமானன் தன் ஊழியனுக்கு சரியாக உணவு கூடப் போடாமல் தன் கடமையிலிருந்து தவறுகிறானே. அதற்கு என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டது.

கழுதையோ ''இந்த மாதிரி சமயத்தில் எஜமானனுக்கு உதவாதவன் துரோகி. நீ நம்

எஜமானனுக்கு உதவா விட்டால் நானே உரக்க கத்தி அவனை எழுப்பப் போகிறேன்'' என்று சொல்லி பலமாகக் 'காள்' 'காள்' என்று கத்தியது.

திருடன் அந்த சத்தம் கேட்டு ஓடி விட்டான். ஆனால் தூக்கம் கலைந்து எழுந்து வந்த சலவைத் தொழிலாளியோ கழுதை தன் தூக்கத்தை கலைத்து விட்டதற்காக அடி அடி என்று அடித்தான். கழுதை முன்பின் யோசியாததால் பட்ட அவஸ்தை இது.

இது போலவே கர்ப்பூர திலகம் என்ற யானையின் கதையும் ஆகும். பிரம்மாரணியம் என்ற காட்டில் கர்ப்பூர திலகம் என்ற யானை இருந்தது. அதனைப் பார்த்த ஒரு நரிக் கூட்டம் ''இதைக் கொன்றால் நமக்கு நான்கு மாதங்களுக்கு உணவைப் பற்றிய கவலையே இராது'' என நினைத்தன.

ஒரு கிழநரி ''இதை நான் சாமர்த்தியமாகக் கொல்கிறேன்'' எனக் கூறி யானையிடம் போயிற்று. அது யானையை வணங்கி ''ஐயா. நான் ஒரு நரி. இந்தக் காட்டு மிருகங்களின் சார்பில் உங்களிடம் தூதனாக வந்திருக்கிறேன். இந்தக் காட்டில் எங்களுக்கு அரசன் இல்லாதது ஒரு பெரிய குறை. எல்லா விதத்திலும் நீங்கள் தாம் எம் அரசராக இருக்கத் தகுதி பெற்றவர். உங்கள் உருவம், உதார குணம், கூரிய அறிவு முதலியன



இப் பதவிக்கு ஏற்ற தகுதிகள். எங்களுக்கும் அரசன் இருந்தாலே நன்மை. அரசன் என்பவன் இருந்து விதிமுறைகளை அமல் செய்தால் மக்கள் நலமுற வாழ முடியும். எனவே தங்களுக்குப் பட்டாபிஷேகம் செய்து எங்கள் அரசனுகத் தங்களை ஆக்கி விடுவது என நாங்கள் முடிவு செய்திருக்கிறோம் எங்களது இந்த வேண்டுகோளைக் ஏற்க வேண்டும்'' எனப் பணிவுடன் கூறியது.

யானையும் சரி எனவே நரி ''என்னேடு வாருங்கள். இப்போதே நல்ல முகூர்த்தம் உள்ளது'' என்றது. யானையும் பதவிக்கு ஆசைப்பட்டு நரியின் பின்னல் சென்றது.

வழியில் சேறும் சகதியும் உள்ள பள்ளம் இருந்தது. ஆனல் மேலாகப் பார்த்தால் அது பள்ளம் போல இராமல் சமமான தரை போல இருக்கும். நரி அங்கு ஓரமாகவே விலகி பள்ளம் இல்லாத இடத்தில் நடந்து சென்றது. கம்பீரமாக நடந்து வந்த யானையோ நகராமல் நேராகத் தான் நடந்து வந்த படியே நடந்து அந்தப் பள்ளத்தில் விழுந்து சேற்றில் அழுந்தியது. அது எழுந்திருக்க முயன்று இன்னும் ஆழமாகச் சேற்றில் இறங்கிவிட்டது.

அப்போது அது நரியிடம் ''இப்போது நான் என்ன செய்வது? இப்படி ஆபத்தில் மாட்டிக்



கொண்டு விட்டேனே'' என்றது நரியோ ஏளனமாகச் சிரித்த வாறே ''என் வாலைப் பிடித்துக் கொள். நான் உன்னை இழுக்கிறேன். அஹ்ஹஹ்ஹா! நீ முன் பின் யோசியாமல் நான் சொன்னதை நம்பினாய். நீ உனக்குச் சமமானவர்கள் சொல்வதை நம்பலாம். என்னைப் போன்றவர்களின் பேச்சைக் கேட்டால் இதுதான் முடிவு'' என்றது.

யானை அங்கேயே தவித்து இறந்து விட்டது. நரிகளோ அந்த யானையின் உடலை வெகு நாட்களுக்கு வைத்துக் கொண்டு சாப்பிட்டன.

இது போலவே அரவல்லி மலை உச்சியில் இருந்த சிங்கத்தின் கதையும் கூறுகிறேன். அந்த சிங்கம் தூங்கும் போது ஒரு சுண்டெலி வந்து அதன் உடல் மீது ஓடி அதன் பிடரி மயிரைக் கடிக்கும். சிங்கத்திற்கு இதனால் கோபம் வரும். அது அந்த சுண்டெலியைப் பிடிக்க முயன்ற போதெல்லாம் அது தந்திரமாகத் தப்பி ஓடி விடும்.

அந்த சுண்டெலியை ஒழிக்க என்ன வழி என யோசித்து எலிகளின் பகைவன் பூனை என்பதால் சிங்கம் ஒரு பூனையைப் பிடித்து அதற்கு நிறைய மாமிசம் கொடுத்து வளர்த்தது.

பூனை சிங்கத்தருகே இருப்பதைக் கண்ட சுண்டெலி பயந்து தன் வளையிலிருந்து வெளியே வராமல் பசியாலும் தாகத்தாலும் துடிதுடித்தது. எவ்வளவு நாட்கள்தான் அது அப்படி இருக்க முடியும்? ஒரு நாள் அது வெளி வந்த போது பூனை சட்டென அதன் மீது பாய்ந்து அதனைக் கொன்றது.

அதன் பிறகோ சிங்கம் பூனைக்கு மாமிச உணவு கொடுப்பதை நிறுத்தி விட்டது. ஏனெனில் சிங்கம் அதனை எலியைக் கொல்லவே கொண்டு வந்தது அந்த வேலை முடிந்து விட்டதே.






## 3

*[குந்தளத் தீவின் நிதிநிலையைத் திருத்த அயல் நாடுகளிலிருந்து பணம் திரட்டி வருவதாகக் கப்பலில் வீரர்களுடன் சமரசேனன் கிளம்பிச் சென்றான் அவனது கப்பல்கள் புயலில் சிக்கித் தத்தளித்து முடிவில் மந்திரத் தீவின் கரையில் போய்ச் சேர்ந்தது. அதில் இறங்கிய சமரசேனன் அங்குள்ள நிலையைக் கண்டு திகைத்தான். அப்போது]*

சமரசேனனும் அவனது ஆட்களும் மரக்கிளைகளின் மீது அமர்ந்து அந்த பயங்கர மிருகங்கள் சண்டையிடுவதைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சிங்கத்தோடு போராடும் யானை அதனிடமிருந்து தப்பமுயன்று கொண்டிருந்தது. சமரசேனனின் வீரர்களோ அந்த பயங்கரத் தீவிலிருந்து என்ன பணத்தை எடுத்துப் போக முடியும் என யோசிக்கலானார்கள்.

சமரசேனனும் ''இந்தத் தீவைப் பற்றிய விவரம் எதுவும் சரியாகத் தெரியவில்லையே. நாகரீகமுள்ள மக்கள் வாழும் தீவாகவும் இது தெரியவில்லையே. மனித நடமாட்டமே இல்லாத இத் தீவில் எங்கே பணம் சேர்த்து வைக்கப்பட்டிருக்கும்? யார் தங்கம் வெள்ளி



போன்ற விலையுயர்ந்த உலோகங்களைக் கொண்டு நகைகளையும் ஆபரணங்களையும் செய்து போட்டுக்கொண்டிருப்பார்கள்? எனவே இங்கே பணமோ, தங்கமோ, வெள்ளியோ என்ன கிடைக்கப் போகிறது" என்று தன் வீரர்களைப் போலவே நினைக்கலானான்.

அப்போது திடீரென ஒரு குரல் ''ஏய் காலநாகா! கராளா!! ஓடி வாருங்கள். அந்த நாலு கண்ணனை தேடிப் பிடியுங்கள்'' என்று உரக்கக் கூவியது சமரசேனனுக்கும் அவனது ஆட்களுக்கும் கேட்டது. அந்தக் குரலைக் கேட்டே அவர்கள் உடல் ஆட்டம் கண்டு விட்டது. அந்தக் குரலைக் கேட்டதுமே குளக்கரையிலிருந்த பயங்கரமிருகங்களும் மரங்களின் மீதிருந்த குரங்குகளும் பயந்து ஓடலாயின.

அப்போது அங்குள்ள குளக்கரைக்கு பயங்கர உருவமுடைய ஒருவன் வந்தான். அவன் பனை மரத்தில் பாதி உயரம் இருந்தான். ஒற்றைக் கண்ணன் தான் அவன். அவனது காலைச் சுற்றிக் கொண்டு ஒரு கருநாகம். அவனது தலைக்கு மேலே சற்று உயரத்தில் வரும் பயங்கர மனித மண்டை ஓடு.

ஒற்றைக் கண்ணன் அந்தக் குளக்கரையில் நின்று சுற்றிலும் ஒரு முறை பார்த்தான் பிறகு ''இந்த மந்திரத் தீவில் அந்தரத்தில் நின்று



எந்திரமலையின் பாறையைக் கண்டு அங்கு போய் பார்த்தால் என்ன தெரியும் சுராளா?'' என்று கேட்டான்.

மண்டை ஓடும் ''நடுக்கடலிலே நடனமாடும் கப்பலாம். அதில் ஏராளமான செல்வம். அக்கப் பலுக்கு வெளியே நின்று அதனைக் காவல்காக்கும் நாககன்னிகை அந்த நாககன்னிகையைக் கொன்று விட்டால் அந்தக் கப் பலில் உள்ளது எல்லாம் நமக்கே சொந்தமாகி விடும்'' என்றது.

ஒற்றைக் கண்ணனும் ''ஆமாம். அவளைக் கொன்று விட்டால் அக் கப்பலில் உள்ளது எல்லாம் நம் முடையதுதான். ஆனால் அந்த நாலு கண்ணன் இருக்கிருனே. அவன் நம்மை இப்படியெல்லாம் செய்ய விட்டு வைப்பானு?'' என்று கேட்டான்.

இதையெல்லாம் கேட்ட சமர சேனன் ''மந்திரத்தீவு! ஒற்றைக் கண்ணன் நாலு கண்ணன்! நாக கன்னிகை! பேசும் மண்டை ஓடு!! ஓ! இதையெல்லாம் நினைக்க நினைக்க தலையே சுற்றுகிறதே'' என்றுன். ஆனுல் எந்திரமலையின் பாறை மீது நின்று பார்த்தால் நிறையப் பணம் உள்ள கப்பல் தெரியும் என்பதை அவன் அறிந் தது குறித்து மிகவும் மகிழ்ச்சி அடைந்தான்.

அப்போது ஒற்றைக் கண்ணன் அக்குளக்கரையிலிருந்து கிளம்பிச் சென்றுன். அவனேடு மண்டை ஓடும் போய் விட்டது. அவனது காலைச் சுற்றி வந்த பாம்பும் போய் விட்டது. அவன் போன துமே சமரசேனனின் வீரர்கள் பெருமூச்சு விட்டவர்களாய் ''அப் பாடா! அந்த ஒற்றைக் கண்ணன் போய் விட்டானு! சரி. இனிமேல் நாம் இங்கிருந்து ஓடிப் போய் நம் கப்பலில் ஏறி விடுவோம். இங்கே மனிதர்களே இல்லை. மந் திரவாதி இருக்கிருன். பயங்கர மிருகங்கள் இருக்கின்றன. இவற்றிடம் நாம் அகப்பட்டுக் கொள்ளக் கூடாது. எனவே




யும் எதிர் நோக்குவோம்'' என்றான்.

பிறகு சமரசேனன் தொப்பென அந்த மரத்திலிருந்து கீழே குதித்தான். அவனது வீரர்களும் பதில் எதுவும் கூறாமல் அவனைப் பின்பற்றிக் கீழே குதித்தார்கள். இனி தம் தலைவன் என்ன சொல்லப் போகிறான் என்பதைக் கேட்க அவர்கள் ஆவலுடன் நின்றார்கள்.

சமரசேனனும் ''நீங்களும் தானே கேட்டீர்கள்? எந்திரமலையின் பாறை மீது பார்த்தால் ஒரு கப்பல் தெரியும். அந்தக் கப்பலில்தான் நம் பொக்கிஷம் உள்ளது. எனவே நாம் அந்த மலையைத் தேடிக் கண்டு பிடித்து அங்குள்ள உயரமான பாறை மீது நின்று கப்பல் இருக்கும் இடத்தைப் பார்க்க வேண்டும்'' என்றான்.

அப்போது ஒரு வீரன் ''தலைவரே! அந்த ஒற்றைக் கண்ணன் கூறியதை அப்படியே நம்பி விட்டீர்களே! அது எல்லாம் உண்மையாக இருக்குமா?'' என்று ஒரு சந்தேகத்தைக் கிளப்பினான். அதற்கு சமரசேனன் ''ஒற்றைக் கண்ணன் கேட்ட கேள்விக்கு மண்டை ஓடு பதில் கூறியது. அது பொய்யாக இருக்க முடியாது. அந்தக் கப்பலை ஒரு நாககன்னிகை காவல் புரிகிறாள் என்பது தெரிகிறது. இந்த ஒற்றைக் கண்ண

நாம் இப்போதே தாமதியாமல் இந்த மந்திரத் தீவை விட்டுப் போய் விடலாம்'' என்று தம் தலைவனிடம் கூறினார்கள்.

ஆனால் சமரசேனனோ அவர்கள் கூறியதைக் காதில் போட்டுக் கொண்டதாகவே தெரியவில்லை. ஏதோ தலையை ஆட்டித் தனக்குள்ளாகவே பேசிக் கொண்டான். பிறகு அவன் தன் வீரர்களிடம் ''இந்தத் தீவில் நமக்குப் பெரும் பொக்கிஷமே கிடைக்கும் வாய்ப்பு உள்ளது. தீவு பயங்கரமானது தான். நாம் அந்தப் பொக்கிஷத்தை அடைய பல ஆபத்துகளை எதிர் நோக்க வேண்டி வரும். ஆனால் துணிச்சலுடன் நாம் எதை

ளைத் தடுக்க நாலு கண்ணன் என்பவன் முயல்கிருன் என்பது தெளிவாகத் தெரிகிறது. எனவே அந்தக் கப்பலே அடைய நாம் நாக கன்னிகை, ஒற்றைக் கண்ணன், நாலு கண்ணன் ஆகியவர்களே எதிர்த்து அடக்கியாக வேண்டும்'' என்ருன்.

அதைக் கேட்ட வீரர்கள் ''ஓ! இது நாம் செய்யக் கூடிய வேலேயா?'' என எண்ணிக் கற் சிலேயாக நின்ருர்கள். அவர் தம் தலேவனிடம் என்ன சொல்வது எனக் கூடத் தெரியாமல் தத்தளிக்கலாயினர். அவர்களேப் பார்த்து சமரசேனனும் ''சரி. என் பின்னுலேயே வாருங்கள்'' எனக்கூறி முன்செல்லலானுன். அவர்களும் அவனேப் பின் தொடர்ந்து சென்ருர்கள்.

அவர்கள் கொஞ்ச தூரம் போனதுமே காதே செவிடாகி விடுவதுபோல பலத்த கூச்சல் ஒன்று கேட்டது. சட்டென சமரசேனன் நின்று அது எங்கிருந்து வருகிறது எனப் பார்க்கலாஞன். அப்போது கன்னங்கரேலென ஒரு ஆந்தை அவர்கள் தலேக்கு மேலாகப் பறந்தவாறே ''நாலு கண்ணு! யாரோ ம்னிதர்கள் வந்திருக்கிருர்கள்! ஜாக்கிரதை!'' எனக் கூவியது. அந்தக் கருப்பு ஆந்தையையும்






ருந்த கருப்பு ஆந்தை கீழே வந்து மனிதக் குரங்கின் தோளின்மீது உட்கார்ந்து அதன் காதில் ரகசிய மாக ஏதோ கூறியது. மறு நிமிடமே அந்தக் குரங்கு மரங் களின் விழுதுக்களைப்பற்றியவாறே மரத்திற்கு மரமாகத் தாவி ஒரு நொடியில் கண்ணுக்குத் தெரியா மல் எங்கோ போய் விடடது.

வீரர்களும் திடீரென மனிதக் குரங்கு எங்கோ மாயமாய் மறைந்து போனது கண்டு ''தலைவரே! இன்னமுமா நாம் எந்திர மலையைத் தேடிப் போக வேண்டும்? நாம் எப்படிப்பட்ட தீவில் வந்து அகப்பட்டுக்கொண் டோம் என்பது தெளிவாகி விட் டது. மிருகங்களும் பறவைகளும் எல்லா உதவிகளையும் புரியும் ஒரு மந்திரவாதியின் சக்தியை எதிர்த் துப் போராட வேண்டும். இதற்கு நம் வாட்களும் அம்புகளும் பயன் படவா போகின்றன?" என்றார்கள்.

சமரசேனன் அவர்கள் கூறியதற்குப் பதிலாக ஒரு புன்னகை புரிந்து விட்டுப்பேசா மல் இருந்தான். கருப்பு ஆந்தையோ ஒரு மரத்தின் மீது உட்கார்ந்து கொண்டு தன் கண் களை உருட்டி உருட்டிப் பார்த்த வாறே இருந்தது. சமரசேனனும் அதனையே இரண்டு நிமிடங்கள் உற்றுப்பார்த்தான். பிறகு ஏதோ

அதன் பயங்கரக் குரலையும் கண்டும் கேட்டும் சமரசேனனின் வீரர்கள் பயந்து போனார்கள். சமரசேன னும் சற்று திகைத்துப் போனான். ஒரு பறவையை வேவு பார்க்க அனுப்பி அதன் வாயிலாக விஷ யங்களை அறியும் மந்திரவாதியை எப்படி எதிர்ப்பது என்ற யோசனையே அப்போது சமர சேனனுக்கு ஏற்பட்டது.

இதே சமயம் ஒரு மனிதக் குரங்கு வருவதை அவர்கள் எல் லாரும் கண்டார்கள். அது ஒரு மரத்தின் கிளையிலிருந்து ஒரு குட்டிக் கரணம் போட்டவாறே தரை மீது உருண்டது. அது வரை உயரப் பறந்து கொண்டி

ஒரு வழி தோன்றி விட்டது போல மகிழ்ந்தவனாய் ஒரு வீரனிடமிருந்து வில்லையும் அம்புகளையும் எடுத்துக்கொண்டான்.

அப்போது அந்த வீரன் ''தலைவரே! சற்று நிதானியுங்கள். நீங்கள் எய்யும் அம்பு அந்த மந்திர சக்திவாய்ந்த பறவையைத் தாக்க முடியாது போனால் என்ன ஆவது? வீணாக இதன் சொந்தக்காரனான நாலுகண்ணனின் எதிரிகளாக நாம் ஆகிவிடுவோம்'' என்றான்.

சமரசேனனோ ''சரி. அதையும் தான் பார்க்கலாமே'' என்று கூறியவாறே அம்பை ஆந்தையின் மீது எய்தான். அம்பும் ஆந்தையைத் தாக்கியது. ஆனால் சமரசேனன் எதிர் பார்த்தபடி அது கீழே விழவும் இல்லை. துடிதுடித்துப் போய் விடவும் இல்லை. நேர் மாறாகத்தன் உடலில் குத்திய அம்பைத் தன் அலகால் எடுத்துத் தூர எறிந்தது. பிறகு அது ''அடே பயலே! என்னைக் கொன்று விட முடியும் என்று நினைக்கிறாய்? உன்னால் முடியாது. அந்த ஒற்றைக் கண் மந்திரவாதியாலேயே என்னை ஒன்றும் செய்யமுடியவில்லையே. உன்னால் என்ன செய்து விட முடியும்? உம். இருங்கள், இருங்கள். எங்கள் நாலுக்கண்ணன் வந்து உங்களை எல்லாம் பிடித்து மூங்கிலை ஒடிப்பது போல ஒடித்து எறி




வான். அதையும் பார்த்து மகிழ்கிறேன்'' என்றது.

சமரசேனனுக்கு அப்போது தான் எத்தகைய ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டாகி விட்டது என்பது தெரிந்தது. அந்த வீரன் எச்சரித்ததைக் கேட்டிருக்க வேண்டும். அந்த ஆந்தை சாதாரணப் பறவை அல்ல மந்திர சக்தி வாய்ந்த பறவை. அதனால் தான் அம்புதைத்தும் துடிதுடித்து இறக்காமல் இருக்கிறது. அவன் தன் வீரர்களை ஜாக்கிரதையாகத் தன் பின்னால் ஓடி வரும்படி எச்சரித்து அங்கிருந்து வேகமாக ஓடலானான். ஆனால் கருப்பு ஆந்தையும் அவர்களைத் தொடர்ந்து உயரப் பறந்த

வாறே பயங்கரமாகக் கூச்சலிட லாயிற்று.

சமரசேனன் தன் கால் போன திசையில் ஓடலானுன். அவனது வீரர்களும் அவ்வாறே ஓடினுர்கள். ஆந்தையும் அவர்களை விடாமல் பின் தொடர்ந்து சென்று கூச் சல் போட்டவாறே பறக்க லாயிற்று. இனியும் ஓட முடியாது என எண்ணிய சமரசேனன் சற்று இளைப்பாற ஓரிடத்தில் நின்ருன். ஆந்தையோ அவனை எதுவும் யோசிக்க விடாமல் பலமாகக் கூச்சல் போட்டவாறே அவர்கள் இருந்த இடத்திற்கு உயரமாகப் பறக்கலாயிற்று. சமரசேனனும் ''நாம் இப்போது எங்கே இருக் கிறேம் என்பது கூடத் தெரிய வில்லை. திரும்பிக் கடற்கரைக்குப் போவதற்கும் வழி தெரியாது. இப்போது ஒரு மந்திரவாதியின் எதிரியாக வேறு ஆகி விட்டோம். இந்த நிலையில் நமக்குத் துணை செய்ய குந்தள தேவியைத் தவிர வேறு யார் இருக்கிருர்கள்? அவ ளைப் பிரார்த்திப்போம்" என்ருன்

அப்போது ஒரு வீரன் ''நாம் முதலில் இந்தக் கருப்பு ஆந்தை யின் கண்ணில் படாமல் தப்பும் வழியைத் தேட வேண்டும். அப் போது தான் நாம் உயிர் தப்ப முடியும்'' என்ருன். சமரசேனன் ஏதோ சொல்லப் போகையில் ''காலநாகா! கராளா!!'' என்ற குரல் காடே எதிரொலிக்கக் கேட்டது.

அதைக் கேட்டதுமே ஆந்தை விர்ரெனப் பறந்து அங்கிருந்து சென்றது. அப்பாடா! ஒரு வழி யாக ஆந்தை ஓடிப்போயிற்றே என அவர்கள் நினைத்து மகிழ்ந்தாலும் அடுத்த விஞடியே ஒற்றைக்கண் ணன் வருவது பற்றி நினைத்து திகில் அடைந்தார்கள். அவன் கண்களில் படக்கூடாதே, என எண்ணி அவர்கள் அங்கிருந்து மிகவும் வேகமாக ஓடினுர்கள்.

(தொடரும்)





# ஏன் கொன்ருன்?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினுன். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே, மனித வாழ்வு சுய நலம் கொண்டது. அதனுல் மனிதன் தன் நலனுக்காக எந்தக் கொடிய செயலையும் துணிந்து செய்வான். இதை விளக்க இந்திர குப்தன் என்பவனின் கதையை கூறுகிறேன். கவனமாகக் கேள்'' எனக் கூறி கதை சொல்லலாயிற்று.

அமராவதியை சிம்மகுப்தன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவன் இளம் வயதினன். மானகிரியின் மன்னன் அமராவதியின் கடும் விரோதி. சிம்மகுப்தனின்

வேதாளம் சொல்லும் கதை



மந்திரியுடன் ஆலோசனை நடத்தினான்.

மந்திரியும் ''மானகிரி மன்னன் நம் எதிரி. அவன் நம்மை அழைப்பான் என எப்படி எதிர் பார்க்கலாம்? அப்படி அவன் நமக்கு அழைப்பு அனுப்பினாலும் நாம் போகவும் கூடாது. ஏனென்றால் எதிரியை நம்பவே முடியாது. எனவே அவன் நமக்கு அழைப்பு அனுப்பவில்லையே என்று சற்றும் கவலைப்பட வேண்டாம். அவன் அனுப்பாமல் போனதே மிகவும் நல்லதாகப் போய் விட்டது. நீங்கள் அங்கு போக வேண்டியதே இல்லை'' என்றான்.

ஆனால் சிம்மகுப்தன் அதனைக் கேளாமல் மற்ற அரசர்கள் செய்தது போலவேத் தன் உருவப் படத்தை முதலில் மானகிரி மன்னனிடம் அனுப்பினான். மானகிரி மன்னனோ அந்தப் படத்தை கொண்டு வந்த ஆட்கள் பார்க்கத் தரையில் விட்டெறிந்து தன் செருப்பைக் கழற்றி அதை அடித்து பாழாக்கி அதை எடுத்து வந்தவர்களிடமே கொடுத்து ''இதைக் கொண்டு போய் உங்கள் அரசரிடம் கொடுங்கள்'' என்றான்.

படம் திரும்பி வந்த அலங்கோலத்தைக் கண்டு சிம்மகுப்தன் கோபம் கொண்டு மானகிரி மீது படை எடுத்துச் சென்றான். இதை

தந்தை உயிருடன் இருந்த போது, பெட்டிப் பாம்பாக அவன் அடங்கிக் கிடந்தான். ஆனால் சிம்மகுப்தன் சிம்மாசனத்தில் ஏறியதுமே மானகிரி மன்னன் அமராவதியின் மீது படை எடுத்து வந்தான். ஆனாலும் அவன் தோற்று ஓடிப் போக வேண்டியதாயிற்று.

ஓரிரண்டு வருடங்களுக்குப் பின் மானகிரி மன்னன் தன் மகள் மஞ்சுளாவிற்கு சுயம்வரம் நடத்த ஏற்பாடு செய்தான். அவன் எல்லா அரசர்களையும் அழைத்தான். ஆனால் சிம்மகுப்தனை மட்டும் அழைக்கவில்லை. இது தன்னை அவமானப் படுத்தியதாகும் என சிம்மகுப்தன் எண்ணித் தன்

கேட்டதுமே மானகிரி மன்னன் சிம்மகுப்தனின் தலையை வெட்டிக் கொண்டு வருபவனுக்குத் தன் மகளைக் கல்யாணம் செய்து வைப்ப தாக அறிவித்தான்.

இது கேட்டுப் பல அரசகுமாரர் கள் ஒன்று சேர்ந்து அமராவதியின் மீது படை எடுத்துப் போய் கோட்டையை முற்றுகை இட் டார்கள். அப்போதுதான் சிம்ம குப்தனின் தம்பி இந்திரகுப்தன் தன் படிப்பை முடித்துக் கொண்டு அமராவதிக்கு வந்திருந்தான்.

அண்ணனும் தம்பியும் அமரா வதிக் கோட்டை மதில் மீது ஏறி நாலா பக்கத்திலும் பல அரசர் களின் படைகள் முற்றுகை இட்டு நிற்பதைக் கண்டார்கள். அப் போது இந்திரகுப்தன் சட்டென வாளை உருவி தன் அண்ணனின் தலையை வெட்டி எடுத்துக் கொண்டு தலையற்ற முண்டத்தை கோட்டைக்கு வெளியே வீசி எறிந் தான்.

தலை இல்லாத சிம்மகுப்தனின் உடலைக் கண்ட அரசகுமாரர்களும் அரசர்களும் தமக்கு முன் யாரோ சிம்மகுப்தனின் தலையை வெட்டி எடுத்துப் போய்விட்டார்கள் என எண்ணித் தம் நாடுகளுக்குத் திரும்பிச் சென்று விட்டார்கள். ஏனெனில் அந்த உடலை எடுத்துப் போவதால் அவர்களுக்கு எவ்வித



நன்மையும் இல்லை. சிம்மகுப்த னின் தலையை வெட்டிக் கொண்டு வருபவனுக்குத்தானே மானகிரி மன்னன் தன் மகளைக் கொடுப்ப தாகக் கூறி இருந்தான்.

இந்திரகுப்தன் தன் அண்ண னின் தலையை எடுத்துப் போய் மானகிரி மன்னனிடம் கொடுத் தான். அதைக் கண்ட மானகிரி மன்னன் தன் வாக்கை நிறை வேற்றவே இந்திரகுப்தனும் மஞ்சுளாவை மணந்து அவனது மாப்பிள்ளையாகி நண்பனுகவும் ஆகி விட்டான். மானகிரி மன் னன் அமராவதியின் பகைவனை இப்போது இல்லாது போய் விட் டான். வேதாளம் இக்கதையைக்

கூறி "இந்திரகுப்தன் தன் அண்ணனைக் கொன்றது சரியா? அவனது நோக்கம் மஞ்சுளாவை மணந்து அமராவதியின் மன்னனுவது என்பதா? தன் பகைவன் என அறிந்தும் மானகிரி மன்னன் தன் மகளை ஏன் இந்திரகுப்தனுக்கு மணமுடித்து வைத்தான்! இக்கேள்விகளுக்குச் சரியான பதில்கள் தெரிந்திருந்தும் நீ கூறு விட்டால் உன் தலை வெடித்து சுக்குநூருகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''சிம்மகுப்தன் கண் மூடித்தனமாக மானகிரி மீது படை எடுக்கப் போய் ஆபத்தை வரவழைத்துக் கொண்டான். அவன் தன் மந்திரி கூறியபடி பேசாமல் இருந்திருக்க வேண்டும். பல அரசகுமாரர்கள் ஒன்ருக வந்த போது சிம்மகுப்தன் திகைத்துப் போனுன், அவர்கள் நிச்சயமாக சிம்மகுப்தனைக் கொன்று விடுவார்கள். இதனை அறிந்த இந்திரகுப்தன் மற்றவர்கள் சிம்மகுப்தனைக் கொல்வதை விடத் தானே அவனைக் கொன்ருல் பல பிரச்னை சுலபமாகத் தீர்ந்து விடும், அதனுல் மானகிரி மன்னனைத் தன் நண்பனுக்கிக் கொள்வது என்று எண்ணியே தன் அண்ணனைக் கொன்ருன். மானகிரி மன்னனும் தான் தோற்ற போதிலும் அமராவதி மன்னனைத் தன் மாப்பிள்ளையாக அடைவதில் மகிழ்ச்சி அடைந்தான். தான் கூறியபடியே சிம்மகுப்தன் தலையைக் கொண்டு வந்த இந்திரகுப்தனுக்குத் தன் மகளை மணம் செய்து வைத்தான். மற்ற அரசகுமாரர்களும் மானகிரி மன்னனின் இந்த முடிவினுல் திருப்தியே அடைந்தார்கள்'' என்ருன்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# உன் வேலை தானே!

தனவர்மனின் நாடு செழிப்பானது. மக்கள் எவ்வித பயமும் இல்லாமல் வாழ்ந்து வந்ததால் மன்னன் அவர்களைப் பற்றி கவலைப்படவே இல்லை. ஆட்சிப் பொறுப்பை அதிகாரிகளிடம் விட்டான். அதிகாரிகளும் மன்னனைப் போலவே எதைப் பற்றிய கவலை இல்லாமல் இருக்கலானார்கள்.

நாடு வளமாக இருந்தாலும் பணம் யாருக்குத் தேவையோ அவர்களுக்கு நியாயமாகக் கிடைக்காமலும் யாருக்குத் தேவை இல்லையோ அவர்களிடம் ஏராளமாக சேர்ந்து கொண்டும் போயிற்று. இதனால் பாதிக்குமேல் மக்கள் சரியான உணவில்லாமல் ஏழைகளாகவே இருந்தனர்.

அந்த நாட்டில் தேனப்பன் என்ற ஒரு திருடன் இருந்தான். வம்ச பரம்பரையாக அவனுக்கு வந்த தொழில் திருட்டே. இதனால் பல ஊர்களில் திரிந்த அவனுக்குப் பணக்காரர்கள் மேலும் மேலும் எப்படிப் பணம் சேர்க்கிறார்கள் என்பது தெரிந்தது. அப்போது முதல் அவன் பணக்கார வீடுகளாகப் பார்த்துப் போய்த் திருடி ஏழைகளுக்கு அந்தப் பணத்தைப் பங்கிட்டு வந்தான். இதனால் ஏழை மக்கள் அவனைத் தெய்வம் போலக் கருதி வந்தார்கள்.

தேனப்பனைப் பற்றிய பல புகார்கள் அரசனுக்குக் கிடைக்கவே அரசன் அவனைப் பிடிக்க முயன்றான். ஆனால் அவனது முயற்சி பலிக்கவில்லை. அரசனது ஒற்றர்களால் கூட அவனைக் கண்டு பிடிக்க முடியவில்லை. ஏனெனில் அவன் திருடி விட்டு தப்பி ஓடுவதில் நன்கு பழக்கப்பட்டவனாவான். அரசன் தேனப்பனைப் பிடிப்பவ

மதுரை மகாலிங்கம்

னுக்கு ஆயிரம் வராகன்கள் பரிசளிப்பதாக அறிவித்தான். பயனில்லை. எனவே பரிசுத் தொகையைப் பலதடவைகளில் உயர்த்திக் கொண்டே போய் லட்சம் வராகன்கள் கூடக் கொடுப்பதாக அறிவித்துப் பார்த்தான். அப்போதும் யாரும் தேனப்பனைப் பிடித்துக் கொடுக்கவில்லை.

அப்போது மன்னன் சில அப்பாவிகளை வேண்டுமென்றே பிடித்துச் சிறைப்படுத்தினான். அவர்களை விடுவிக்கவாவது தேனப்பன் வருவான் என அவன் எதிர்பார்த்தான். ஆனால் அவன் எதிர்பார்த்தபடி எதுவும் நடக்கவில்லை. அதனால் கோபமடைந்து குற்றமற்ற இருவரைத் தேனப்பனின் கூட்டாளிகள் எனக்கூறி தூக்கு தண்டனை விதித்தான்.

அப்பாவிகள் இருவர் தூக்கிலிடப்பட்ட மறு நாளே தேனப்பன் அரசாங்க வீரர்களிடம் தானே அகப்பட்டு அரசனின் முன் போனான். அப்போது மன்னன் ''நீயும் ஒரு மனிதனா! உன் ஆட்கள் அநியாயமாகத் தூக்கில் போடப்பட்டார்கள் என்றது கண்டு தானே என் முன் வந்தாய்?'' என்று கேட்டான்.

தேனப்பனும் ''அநியாயம் என்று தெரிந்தும் அவர்களை பலி வாங்கிய நீயும் ஒரு அரசன் தானா?'' என்று பதிலுக்குத் திருப்பிக் கேட்டான் தேனப்பன். அரசனும் ''திருடர்களைப் பிடிக்க சில



அட்டூழியங்களை அரசன் செய்யத் தான் வேண்டி வரும்'' என்ருன். ''திருடனைப் பிடிக்க வேறு வழி ஏதாவது உண்டா என யோசித்துப் பார்த்தாயா?'' என்று தேனப்பன் கேட்டான்.

அரசனும் ''நீ மக்களுக்கு எல்லாம் லஞ்சம் கொடுத்து அவர்கள் வாயை அடக்கி விட்டாய்'' என்ருன். தேனப்பனும் ''நான் எவ்வளவு பேர்களுக்குத்தான் லஞ்சம் கொடுக்க முடியும்? நான் திருடனுக இருந்த போதிலும் ஒரு அரசன் செய்ய வேண்டிய வேலையை நான் செய்தேன். அதனுல் என்னை மக்கள் உன்னை விட அதிகம் மதித்தார்கள். நீ எவ்வளவு பணம் கொடுப்பதாகக் கூறினுலும் அவர்கள் என்னைப் பிடித்துக் கொடுக்கவில்லை. அப்பாவிகளை நீ சிறையில் தள்ளிய போது கூட மக்கள் என்னை உன் முன் வர விடவில்லை. நீ ஒரு குற்றமும் செய்யாத இருவரை பலி கொண்ட போதும் என்னை உன் முன் வர அனுமதிக்கவில்லை. நான்தான் உன் அட்டூழியங்களைச் சகிக்க முடியாமல் உன் வீரர்களிடம் அகப்பட்டேன். இப்போதும் உன்னுல் என்னை ஒன்றும் செய்ய முடியாது'' என்ருன்.

அரசன் 'ஏன்?' என்று கேட்டுக் கொண்டிருக்கும் போதே அரண்மனைக்கு முன் மக்கள் ஆயிரக்கணக்கில் கூடி விட்டனர், அவர்களுக்குத் தேனப்பன் தானே வலிய அர



சாங்க வீரர்களிடம் அகப்பட்டது தெரிந்து விட்டது. 'தேனப்பனைத் தொடாதே! அவனை விட்டு விடு' என்ற கோஷங்கள் வானைப் பிளந்தன.

மன்னன் அது கேட்டு ஆச்சரியப் பட்டவனாய் "தேனப்பா! அரசன் செய்ய வேண்டிய வேலையை நீ செய்ததாகக் கூறினாயே. அரசன் உன்னைப் போலத் திருடவா வேண்டும்?" என்று கேட்டான்.

தேனப்பனோ "இல்லை. மக்கள் நலனைக் கண்டு பேணுவது அரசனின் கடமை. அவர்களது தேவைகளைக் கண்டு வசதிகள் செய்து கொடுப்பதும் மன்னனின் கடமை. இதை எல்லாம் நீ செய்யவில்லை. நான் செய்தேன். எனவேதான் திருடனாகிய என்னை அரசனாகிய உன்னால் பிடிக்க முடியவில்லை. தெரிந்ததா?" என்றான்.

மன்னனும் "அப்படியானால் நீ இந்த நாட்டை ஆள விரும்புகிறாயா?" என்று கேட்டான். தேனப்பனும் "இல்லை, எனக்கு அப்படி எல்லாம் ஆசை கிடையாது. அதற்குத் தகுதியும் எனக்கு இல்லை. ஆனால் ஒன்று மட்டும் சொல்கிறேன். அரசனை விடத் திருடனே மேல் என்று மக்கள் நினைக்கும் விதமாக மட்டும் ஆட்சியை நடத்த வேண்டாம். மக்களுக்கு நீ நன்மைகளைச் செய்தால் உன் நாட்டில் என் போன்ற திருடர்கள் இருக்கவே மாட்டார்கள். இதுதான் நான் சொல்வது" எனக் கூறி விட்டு அங்கிருந்து சென்றான்.

மன்னன் அவனைத் தடுத்து நிறுத்தவில்லை. மக்களின் அபிமானத்தை ஒரு திருடன் பெற்றானே, தன்னால் பெற முடியவில்லையே என எண்ணி அப்போது அவன் அவமானத்தால் தலை குனிந்து கொண்டான். அதற்குப் பிறகு அவன் ஆட்சியில் கவனம் செலுத்தி மக்கள் சுகமாக வாழும் வழி முறைகளை செய்தான்.





# பணம் வேண்டாம்

நன்கு இருட்டி விட்டது. மழை வேறு பெய்து கொண்டிருந்தது. அப்போது பரமன் வீட்டு வாசல் கதவைச் சாத்த வந்தான். வீட்டுத் திண்ணையில் யாரோ இருப்பது கண்டு ''யாரப்பா அது? மழையில் நன்றாக நனைந்து விட்டாயே. வா உள்ளே. துணிகளைப் பிழிந்து உலர்த்திக் கட்டிக் கொள்ளலாம்'' என்றான்.

அந்த மனிதனும் நன்றி செலுத்தியவாறே வீட்டிலுள் வந்தான். அவனுக்கு உடுத்திக் கொள்ள ஒரு வேஷ்டியைக் கொடுத்து பரமன் அவனது துணிகளைப் பிழிந்து உலர்த்தச் சொன்னான். அவனது துணிகள் ஒரு ஏழையினுடையதுதான். விலையுயர்ந்தவை அல்ல.

அவன் சமையலறைக்குப் போய்த் தன் மனைவியிடம் ''ஐயோ பாவம்! யாரோ ஒருவன் மழையில் நனைந்து வந்திருக்கிறான். அவனுக்கு சாப்பாடு போடுகிறாயா?'' என்றான்.

அவனது மனைவியோ ''வழியில் போகிறவனுக்கு எல்லாம் என்றால் சாப்பாடு போட முடியாது. மழை இன்னும் சற்று நேரத்தில் நின்று விடும். அவனை அனுப்பி விடுங்கள்'' என்றாள் முகத்தைச் சுளித்தவாறே.

பரமனும் அங்கிருந்து முன் அறைக்கு வந்தான். மழையோ மேலும் பலத்தது. நிற்கும் வழியே காணோம். அதனால் பரமன் வந்த மனிதனுக்குச் சாப்பாடு போடா விட்டாலும் படுத்து கொள்ளவாவது ஒரு பாயைக் கொடுக்கலாம் என எண்ணி ஒரு பாயை எடுத்து அவனுக்குக் கொடுத்தான்.

ஈரோடு பெரியசாமி



அப்போது பரமனின் மனைவி ''யாரையோ வீட்டினுள் வர சொல்லி வீட்டில் படுத்துக் கொள்ளவும் சொல்லி விட்டீர்களே? முன்பின் தெரியாதவர்களை இந்தக் காலத்தில் நம்பலாமா? '' என்று கேட்டாள்.

பரமனும் ''இவன் எனக்கு நன்கு தெரிந்தவனே. சொல்கிறேன் கேள்'' எனக் கூறி தன் மனைவியிடம் விவரமாகத் தன் கதையைக் கூறலானான்.

''நான் சிறுவனாக இருக்கும் போது படிக்காமல் ஊர்சுற்றி உதவாக்கரை என்ற பெயரைப் பெற்று விட்டேன். இப்படியே வளர்ந்து கொண்டே போய் இருபது வயது வாலிபனாகி விட்டேன். என் நண்பர்களும் என்னைப் போன்றவர்களே. எனவே எனக்கு வேலை கொடுக்க எல்லோருமே மறுத்தார்கள். நாமே வியாபாரம் செய்தால் என்ன என்று எண்ணி நான் என் தந்தையிடம் முதல் . போடப் பணம் கேட்டேன். அவர் கொடுக்க மறுத்தார். அதனால் என் நண்பன் ஒருவனின் யோசனைப் படி என் தந்தையின் பணப் பெட்டியிலிருந்து இரண்டாயிரம் ரூபாய் திருடி எடுத்துக்கொண்டு வேறொரு ஊருக்கு ஓடிப் போனேன். அங்கே என் நண்பன் வந்து வியாபாரம் செய்யலாம் எனக் கூறி என் பணத்தை வாங்கிக் கொண்டு என்னை நடுத் தெருவில் நிறுத்தி விட்டுஎங்கோ போய் விட்டான்.

என் தந்தையும் என்னைத் தேடிக் கொண்டு அந்த ஊருக்கு வந்திருக்கிறார் என்பது எனக்குத் தெரிய வந்தது. உடனே நான் பக்கத்திலிருந்த ஒருகாட்டிற்குள் ஓடிப் போனேன்: அங்கே ஒரு காட்டாறு ஓடிக் கொண்டிருந்தது. அந்த ஆற்றங் கரையில் ஒருவன் குளித்துவிட்டு வந்து தன் உடம்பைத் துண்டால் துவட்டிக் கொண்டிருந்தான். அவனுக்குச் சொட்டைத்

தலை. அவனது வலது கையில் ஆறு விரல்கள் இருந்தன.

அந்த மனிதனுக்குச் சற்று தூரத்தில் ஒரு பெட்டி இருந்தது. அவன் அதனைக் கவனியாது இருக்கவே நான் அவன் கண்ணில் படாமல் போய் அந்தப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு வேகமாகவே வேறு எங்கோ ஓடி விட்டேன். ஓரிடத்தில் அதனை வைத்துத் திறந்து பார்க்க அது நிறையத் தங்கக் காசுகளாக இருந்தன.

நான் அப் பெட்டியை எடுத்துக் கொண்டு என் ஊருக்குப் போய் என் தந்தையிடம்காட்டி ''இதோ பணம் சம்பாதித்து வந்திருக்கிறேன்'' என்றேன். அதைக் கொண்டே வியாபாரம் செய்யச் சொல்லி என் தந்தை கூறவே நானும் வியாபரம், செய்து நல்ல லாபம் சம்பாதித்தேன். பிறகு உன்னையும் மணந்து கொண்டேன்.

அன்று நான் ஆற்றங்கரையில் இந்த மனிதனைத்தான் கண்டேன். இதே சொட்டைத் தலை. இதே ஆறு விரல்கள் வலது கையில். இவனது பணத்தால் முன்னுக்கு வந்தேன்:

இக்கதையைக் கூறியதும் பரமனின் மனைவி ''அந்தப் பணம் உங்களுக்குக் கிடைக்க



வேண்டும் என்று இருந்தது. கிடைத்தது. உங்கள் அதிர்ஷ்டம் வியாபாரமும் கை கூடியது. பேசாமல் படுங்கள் காலையில் பார்க்கலாம்'' எனக் கூறி படுத்துத் தூங்கி விட்டாள்.

பரமனோ தூங்கவில்லை. சற்று நேரம் கழித்து எழுந்து ஒரு பையில் ஐயாயிரம் ரூபாய்களைப் போட்டு அதனை வந்தவனின் மூட்டைக்குள் வைத்து விட்டுப் படுத்துத் தூங்கினான்.

காலையில் அந்த மனிதன் எழுந்து பரமனுக்குத் தன் நன்றியை தெரிவித்து விட்டு தன் மூட்டைகளை எடுத்துக் கொண்டு கிளம்பினான். ஆனால் அதே மனி

தன் உச்சி வேளைக்கு மறுபடியும் பரமனின் வீட்டிற்கு வந்து "ஐயா, உங்கள் பணப்பையை ஒன்று எப்படியோ என் மூட்டையில் வந்து விட்டது. இந்தாருங்கள்'' என எடுத்துக் கொடுத்தான்.

பரமனே அவனது நேர்மையைக் கண்டு மகிழ்ந்து ''நான் தான் இதை உங்கள் மூட்டைக்குள் வைத்தேன். ஒரு முறை நீங்கள் ஆற்றங்கரையில் பணப் பெட்டியை வைத்து விட்டுக் குளித்த போது அதை உங்களுக்குத் தெரியாமல் தூக்கி வந்தேன். அந்தப் பணத்தைத்தான் இப்போது திருப்பிக் கொடுத்திருக்கிறேன்'' என்றான்.

அந்த மனிதனும் ''இதை நான் தொடமாட்டேன். அன்று நீங்கள் கூறியபடி ஆற்றங்கரையில் இருந்தவன் நானே. ஆனால் பணப் பெட்டி என்னுடையதல்ல. வேறு யாருடையதோ! அவனை ஏதாவது கொடியமிருகம் கொன்று இழுத்துப் போயிருக்க வேண்டும். அதனால் தான் பெட்டி அங்கே கிடந்திருக்கிறது. உங்கள் அதிர்ஷ்டம் அது உங்களுக்குக் கிடைத்தது. எனவே என் பணமே அல்ல அது'' எனக் கூறி பணப் பையை பரமனின் கையில் திணித்து விட்டுப் போய் விட்டான்.

அவன் தான் எவ்வளவு உயர்ந்த மனிதன்! பிறர் பணத்திற்கு ஆசைப் படவே இல்லை. பரமன் யோசித்துப் பார்த்தான். முடிவில் அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. அதை அவன் தன் மனைவியிடம் கூறவில்லை. ஆனால் ஒரு நாள் ஒரு பெட்டியில் தங்கக் காசுகளைப் போட்டுத் தன் மனைவிக்குத் தெரியாமல் பரமன் எடுத்துப் போய் கிராம அதிகாரியிடம் கொடுத்து ''இதை பொது நலனுக்காக செலவிடுங்கள்'' எனக் கூறி விட்டு வந்தான். அப்போது தான் அவன் மனம் நிம்மதி பெற்றது.






# முன்யோசனை

பிரம்மதத்தன் காசியை ஆண்ட போது போதிசத்துவர் ஒரு வியாபாரியின் மகனுகப் பிறந்தார். வீட்டின் மூத்த மகனுன அவர் ஐநூறு வண்டிகளில் சரக்குகளை ஏற்றிக்கொண்டு பல இடங்களுக்குப் போய் விற்று வருவார்.

காசியில் வேறெருரு வியாபாரி இருந்தான். அவனுக்கு அவ்வளவாக சாமர்த்தியம் போதாது. ஒரு முறை போதிசத்துவர் தம் வண்டிகளில் சரக்குகளை ஏற்றிக் கொண்டு கிளம்பலாம் என நினைத்தபோது அந்த மக்கு வியாபாரியும் தானும் கிளம்புவதாகக் கூறினன். அப்போது போதிசத்துவர் "நம் இருவரது வண்டிகளும் ஒன்ருகக் கிளம்பினல் பாதையையே அடைத்துக் கொண்டு விடும். எனவே யாராவது ஒருவர் முன்னதாகப் போகலாம். ஒரு சில நாட்கள் கழித்து மற்றவர் கிளம்பலாம். நீ முதலில் போகிருயா அல்லது. நான் முதலில் போகட்டுமா?'' என்று கேட்டார்.

மக்கு வியாபாரியோ தான் முதலில் போனுலே தனக்கு எல்லாவிதத்திலும் லாபம் என எண்ணினன். போதிசத்துவரோ ''இவன் முதலில் போனல் வழியில் என்னென்ன செளகரியங்கள், கஷ்டங்கள் உள்ளன என்று தெரியும். அவன் பட்ட கஷ்டங்களை நாம் பட வேண்டி இராது. வசதிகளைப் பூரணமாக அனுபவிக்கலாம்'' என எண்ணினர்.

மக்கு வியாபாரிதான் முதலில் செல்வதாக போதிசத்துவரிடம் கூறவே அவரும் ''சரி, நீ போ. பிறகு நான் கிளம்புகிறேன்''. எனக் கூறி அனுப்பினர்.



மக்கு வியாபாரி போக வேண்டிய இடம் அறுபது யோசனை தூரத்தில் இருந்தது. மத்தியில் பெரிய பாலைவனம் ஒன்று இருந்தது எனவே வழியில் உண்ண உணவும், குடிக்க நீரும் பீப்பாய்களில் எடுத்துக் கொண்டு போதிசத்துவருக்கு லாபம் கிடைக்காமல் செய்வேன் என எண்ணி மகிழ்ந்தவாறே மக்கு வியாபாரி கிளம்பினான்.

அவனது வண்டிகள் வெகு தூரம் போய் பாலைவனப் பகுதிக்குள் நுழைந்தன. அதில் கொஞ்ச தூரம் போனதுமே மக்கு வியாபாரி ஒரு அழகான வண்டி வருவதைக் கண்டான். அதில் இருந்தவன் ராஜா போல இருந்தான். அந்த வண்டியைச் சுற்றிலும் வீரர்கள் சிலர் கத்திகளைப் பிடித்துக்கொண்டு வந்து கொண்டிருந்தார்கள், வண்டிச் சக்கரத்தில் சேறு ஒட்டிக் கொண்டிருந்தது. எல்லோரிடமும் தாமரை மலர்கள் இருந்தன.

வண்டியில் இருந்தவன் மக்கு வியாபாரியிடம் ''வழியெல்லாம் ஒரே மழை. அதோ அந்தக் குளத்தில் நீர் நிரம்பி வழிகிறது. வழியில் தண்ணீர் ஓடுகிறது. நீங்கள் ஏன் இந்தப் பீப்பாய்களில் விருகத் தண்ணீர் கொண்டு போக வேண்டும்? எல்லாவற்றையும் கொட்டி விட்டால். வண்டிகளை மாடுகள் சிரமமில்லாமல் இழுக்கும்'' என்றான்.

அந்த வண்டியில் இருந்தவன் உண்மையில் ஒரு ராட்சஸன். அவன் கூட வந்திருந்தவர்களும் மனித மாமிசம் சாப்பிடும் ராட்சஸர்களே. அவர்கள் அப்பாலை வனத்திற்கு வருபவர்களை இந்த மாதிரி ஏமாற்றி அவர்களைப் பசியாலும் தாகத்தாலும் துடிதுடிக்கச் செய்து அவர்கள் இறந்ததும் அவர்களது உடல்களைச் சாப்பிட்டு விடுவார்கள்.

இதை அறியாத மக்கு வியாபாரி தன்னிடம் இருந்த தண்ணீரை எல்லாம் கொட்டிவிட்டு

போனன். அவன் போகப் போக ஏதோ குளம் இருப்பது போலத் தென்பட்டாலும் அங்கே போய்ச் சேரவில்லை. அது கானல் நீர்.

மக்கு வியாபாரியும் அவனது ஆட்களும் தாகத்தால் தவித்தனர். நாவறண்டு ஒவ்வொருவராக விழுந்து இறந்து போயினர். வண்டி மாடுகளும்விழுந்து இறந்தன. இறந்த மனிதர்களையும் எருதுகளையும் ராட்சஸர்கள் தின்று மகிழ்ந்தார்கள்.

நாற்பது நாட்களுக்குப் பின் போதிசத்துவர் தம் வண்டிகளோடு கிளம்பினர். அவரும் மக்கு வியாபாரி போன பாதையிலே சென்று பாலைவனப் பகுதியை அடைந்தார். அவரும் தமக்கும் தம் ஆட்களுக்கு வேண்டிய உணவையும் நீரையும் கூடவே எடுத்துப் போயிருந்தார். அவர் தம் ஆட்களிடம் ''யாரும் என்னைக் கேட்காமல் எதுவும் செய்யக் கூடாது'' என எச்சரித்து இருந்தார்.

சற்று நேரத்திற் கெல்லாம் அழகிய வண்டி வந்தது. அதில் இருந்தவன் மக்கு வியாபாரியிடம் கூறியது போலவே போதிசத்துவரிடமும் கூறினன். போதிசத்துவரும் ''சரி. நீங்கள் உங்கள் வழியே போங்கள். இனி வரும் இடத்தில் தண்ணீர் இருந்தால் இந்த நீரைக் கொட்டி விட்டு அதை எடுத்துக் குடிக்கிறோம். இப்போது கிளே



கொட்ட மாட்டோம்'' என்ருர். அந்த வண்டி போய்விட்டது சிலர் தண்ணீரைக் கொட்டி விடலாமே என்ற போது போதிசத்துவர் ''இந்தப் பாலேவனத்தில் குளம் இருப்பதாக யாரும் சொன்னதில்லே. நாமும் கேட்டதும் இல்லே. மழை பெய்ததாக அவன் கூறினுனே. ஈரக் காற்று அடித்ததா? ஆகாயத்தில் ஒரு மேகமாவது இருக்கிறதா? இடியோ மின்னலோ இருந்ததா? இவர்கள் மாயாவிகளான ராட்சஸர்கள். நாம் துடிதுடித்து வீழ்ந்ததும் நம்மைச் சாப்பிட விரும்புகிருர்கள். நமக்கு முன் போன மக்கு வியாபரியையும் அவனது ஆட்களேயும் இப்படியே கொன்று சாப்பிட்டு விட்டார்கள் போலிருக்கிறது. வழியில் அவர்களது எலும்புக் கூடுகளே நாம் பார்க்கத்தான் போகிருேம்'' என்ருர். அவர் சொன்னபடியே அவர்கள் கொஞ்ச தூரம் போனதும் மக்கு வியாபாரியின் வண்டிகள் மட்டும் நிற்பதையும் அவற்றைச் சுற்றி மனித எலும்புக் கூடுகளும் எருதுகளின் எலும்புக் கூடுகளும் இருப்பதைக் கண்டார்கள்.

போதிசத்துவரும் ''பார்த்தீர்களா? மக்கு வியாபாரி சற்றும் யோசியாமல் தன்னிடமிருந்த நீரைக் கொட்டி விட்டுத் தன் ஆட்களோடு இப்படி இறந்து விட்டான்'' என்ருர் அங்கே அன்றிரவு அவர்கள் தங்கினுர்கள். அங்கே இருந்த வண்டிகளில் கெடாமல் இருந்த சாமான்களே எடுத்துத் தம் வண்டிகளில் போட்டுக் கொண்டு அவர்கள் தாம் போக வேண்டிய இடத்திற்குப் போய் லாபத்திற்கு தம் பொருள்களே விற்றுப் பத்திரமாக எவ்வித சேதமும் இல்லாமல் ஊர் திரும்பினுர்கள். போதிசத்துவரின் முன் ஜாக்கிரதையால் எல்லோரும் க்ஷேமமாக இருக்க முடிந்தது.





# மாபெரும் சோதனை

சுத்தோனனன் தன் மகன் கஷ்டங்களைப் பார்க்காமலும் அவை பற்றிக் கேட்காமலும் இருக்க ஏற்பாடு செய்தான். சித்தார்த்தன் எல்லா சுகங்களையும் அனுபவிக்க ஏற்பாடு செய்தான். இசை, நடனம் எனவும் நடந்தது.

யசோதரைக்கு மகன் பிறந்தான் அவ்வப்போது விரக்தியாகப் பேசும் சித்தார்த்தன் இனித் தன் மகனோடு இருந்து மகிழ்வான் என சுத்தோதன மன்னன் எண்ணி திருப்தி அடைந்தான்.





ஒரு நாள் சித்தார்த்தர் தன் தந்தையின் அனுமதி பெற்றுப் பூங்காவிற்குச் சென்றார். வழியில் அவர் ஒரு கிழவனையும், நோயாளியையும் பிணத்தையும் கண்டார். அவர் மனம் கலங்கினார். ஏனெனில் இது போன்றவற்றை அவர் முன்பு கண்டதே இல்லை.



அடுத்தபடியாக ஒரு சன்னியாசி யைப் பார்த்தார். அவர் அரச குமாரன் கேட்டதற்கு அமைதியாக பதில் அளித்தார். வயோதிகம், நோய், மரணம் என்பது எல்லா மனிதர்களுக்கும் வரும். எனவே உலக பந்தங்களிலிருந்து விடுபட சன்னியாசியாவதே சரி என அவர் கூறினார்.

சித்தார்த்தர் இவை பற்றிச் சிந்திக் கலானார். மனிதன் ஏன் கஷ்டப்பட வேண்டும்? இல்வாழ்வில் சுகம் என்றால் சன்னியாச வாழ்வு எதற்கு? இவை பற்றி அறிந்து தெளிவு பெற ஒரு நாள் இரவு அவர் தம் வீட்டை விட்டுக் கிளம்பி விட்டார்.





தலை வாசலில் ஒரு உருவம் தோன்றி ''அரசகுமாரா! உனக்குப் புகழும் சுகமும் கிடைக்கும். நீ மன்னாதி மன்னனாவாய். நீ போகாதே'' என்றது. அப்படிக் கூறியது துஷ்ட சக்தியின் குரலே.

சித்தர்தத்தர் குதிரை மீது ஏறிக் கொண்டு தன் வேலையாளைத் தன்னோடு வரச் சொன்னார். காட்டிற்குள் போனதும் அவர் குதிரையிலிருந்து இறங்கி அதை அரண்மனைக்கு ஓட்டிச் செல்லுமாறு தன் வேலையாளிடம் கூறி அனுப்பினார். பிறகு அவர் தன் நீண்ட தலைமுடியைக் கத்தியால் வெட்டிக் குறைத்தார்.






மறு நாள் அந்த வேலையாள் அரண்மனைக்குப் போய் சித்தார்த்தர் காட்டிற்குப் போய் விட்டதை அரசனிடமும் மற்றவர்களிடமும் கூறினான். அதே சமயம் சித்தார்த்தர் தம் உடைகளை ஒரு பிச்சைக்காரனுக்குக் கொடுத்து விட்டு அவனது துணிகளை வாங்கிக் கட்டிக் கொண்டார்.

சித்தார்த்தர் பல நாடுகளில் திரிந்து பல அறிஞர்களைக் கண்டார். அவர்களிடமிருந்து கற்க வேண்டியதைக் கற்றார். ஆனால் உண்மையைத் தானே கண்டு கொள்ள வேண்டுமென அவர் மனதில் பட்டது. தாம் அமர்ந்து தியானம் செய்ய ஒரு இடத்தைத் தேடினார்.





அவருக்கு ஒரு பெரிய ஆலமரம் தென்பட அதன் கீழ் அமர்ந்து தியானம் செய்யலானார். ஐந்து தபஸ்விக்கள் அவரைப் பார்த்து ஒரு மகான் எனக் கருதி அவருக்குப் பணிவிடைகள் புரிந்தனர். இப்படியே சித்தார்த்தர் ஆறு வருடங்களைக் கழித்தார்.

உடலை வருத்துவதால் தன் நோக்கம் நிறைவேறாது என அவருக்குத் தெரிந்து விட்டது. சுஜாதை என்ற பெண் கொடுத்த உணவை அவர் ஏற்றார். அவரது நிஷ்டை கலைந்து விட்டதென எண்ணி அவரது ஐந்து சீடர்களும் அவரை விட்டுப் போயினர்.





சித்தார்த்தர் நதிக்கரையிலிருந்த போதி மரத்தடியே அமர்ந்தார் அது ஒரு பௌர்ணமி இரவு. அவர் தன் மனதில் சாந்தி நிலவியதாகவும் தன்னுள் ஒரு ஒளி பிரவேசித்தது போலவும் உணர்ந்தார். அவருக்கு ஞானோதயம் ஏற்பட்டது அவர் புத்தர் ஆனார்.



# ஒப்புக்கொண்டான்

மதுரையில் மாணிக்கம் என்பவர் நகைக்கடை வைத்திருந்தார். அவர் கடையில் சோமு என்ற பையன் வேலை செய்து வந்தான். மிகவும் நம்பிக்கையானவன் எனப் பெயர் எடுத்தான். அவன் மீது மாணிக்கத்திற்கு பரிபூரண நம்பிக்கைஇருந்தது.

ஆனால் திடீரென ஒருநாள் சோமுவின் மனம் திருட எண்ணிவிட்டது. ஒருநாள் கடை மூடும்போது புதிதாகச் செய்து சிறு பெட்டியில் வைக்கப் பட்டிருந்த ரத்தினமாலையை அவன் தன் மடியில் கட்டி மறைத்து எடுத்துக் கொண்டு தன் வீட்டிற்குப் போனான்.

மறுநாள் கடை திறந்ததும் மாணிக்கம் நவரத்தின மாலை இருந்த பெட்டியை எடுத்துப் பார்த்தார். அதில் மாலை இல்லாதது கண்டு திடுக்கிட்டார். ஆனால் மாலை காணவில்லை என்று யாரிடமும் சொல்லவில்லை. அப்படிச் சொல்லாமலே அந்தத் திருட்டைக் கண்டு பிடிக்கத் தீர்மானித்துக் கொண்டார். அவருக்கு யார் மீது சந்தேகம் ஏற்பட்டாலும் சோமுவின் மீதும் மட்டும் ஏற்படவே இல்லை.

கடையில் மற்ற மூன்று பையன்களை அவர் வேலை செய்ய விட்டு கவனிக்கலானார். சோமுவும் வழக்கம் போலத் தன் வேலையில் ஈடு பட்டான். அப்போது அவரது நண்பன் நாராயணன் என்பவன் ''கேட்டாயா கதையை! என் கடையில் திருட்டுப் போய்விட்டது. ஆனால் திருடனைப் பிடித்து விட்டேன். இது

கல்யாணி கனகரத்தினம்



நேற்று நடந்த சம்பவம். வழக்கம் போல இரவில் கடை சாத்தும்போது நகைப் பெட்டி ஒன்றில் இருந்த மாலை காணவில்லை. உடனே எல்லா வேலைக்காரர்களையும் நிறுத்தி சோதனை போட்டேன். திருடன் அகப்பட்டான். நான் யாரைப் பல வருடங்களாக யோக்கியன் என நினைத்து வந்தேனோ அவன் தான் மாலையைத் திருடித் தன் மடியில் மறைத்து வைத்திருந்தான்! பாரேன். மனிதன் எப்படி எல்லாம் மாறுகிறான்! எல்லாம் காலம் செய்யும் கோலம். இப்போதெல்லாம் யாரையும் நம்புவதற்கு இல்லை.'' என்றான்.

அப்போது மாணிக்கம் ''அவனை என்ன செய்தாய்? காவல் வீரர்களிடம் ஒப்படைத்தாயா?'' என்று கேட்டார். நாராயணனோ ''அதெல்லாம் இல்லை. நன்றாக வெளு வெளு என முதுகு வீங்க அடித்து விரட்டி விட்டேன். இவ்வளவு நாட்கள் நாணயமாக நடந்தவனைச் சிறையில் அடைப்பதில் என்ன லாபம்? எனக்கு என் மாலை கிடைத்து விட்டது. அவனோ நேர்மையற்றவன் என்பது தெரிந்து வேலையை இழந்தான். அதுதான் அவனுக்கு தண்டனை'' என்றான்.

மாணிக்கமோ ''என்னமோ அப்பா! நானா இருந்தால் அடித்ததோடு நில்லாமல் அவனைக் கம்பி எண்ணவும் வைத்திருப்பேன். இப்படிப்பட்ட பயல்களைச் சும்மா விடக் கூடாது'' என்றார்.

அவர்கள் இருவர் பேசியதைச் சற்று தூரத்தில் வேலை செய்தவாறே கேட்டுக் கொண்டிருந்த சோமு தன் கையிலிருந்த கூஜாவைத் தடால் எனக் கீழே போட்டான் அவன் கை நடுங்கியது. இதை கவனித்த மாணிக்கம் ''ஓஹோ! இவன்தான் திருடன் போலிருக்கிறது. அதனால்தான் நாராயணனும் நானும் பேசியதைக் கேட்டு நடுங்கினான்' எனத் தெரிந்து கொண்டார்.

நாராயணன் போன சற்று நேரத்திற்கெல்லாம் சோமு தன் எஜமானனுன மாணிக்கத்திடம் ''இன்று எனக்கு உடம்பு சரியில்லை. விடுமுறை கொடுங்கள்'' என்முன். மாணிக்கமும் ''அப்படியா? உடம்பு சரியில்லை என்றுல் கடைக்கு ஏன் வந்தாய்? தகவல் சொல்லி அனுப்பி இருக்கலாமே.'' என்முர். சோமுவும் பேந்தப் பேந்த விழிக்கவே மாணிக்கமும் ''ஏன் விழிக்கிருய்? நீ இவ்வளவு நாட்களாக நேர்மையுடன் வேலை செய்து வந்ததற்காக உன் சம்பளத்தில் பத்து ரூபாய் அதிகம் உயர்த்தி இருக்கிறேன். தெரிந்ததா?'' என்முர்.

சோமு திகைத்துப் போனுன். அவனுல் பேசவே முடியவில்லை. அப்போது மாணிக்கம் ''ஏன் பேசாமல் இருக்கிருய்?'' எனவே அவனும் ''எல்லாம் உங்கள் தயவு இருந்தால் போதும்'' என்முன்.

பரமனும் ''சரி. இன்றைக்கு நீ வீட்டிற்குப்போ. உடம்பு சரியானதும் திரும்பி வந்தால் போதும் போகும்போது ஒரு சிறு வேலையைச் செய். நங்கபுரம் ஜமீன்தாரருக்கு நவரத்தின மாலை செய்தோமே. அதை இன்றுதான் கொடுப்பதாகச் சொன்னேன். அதோ இருக்கிறது நகைப் பெட்டி. அதைக்கொண்டு போய்க் கொடு. அவர் நம்மிடம் பேசிய செய் கூலிப் பணம்



கொடுப்பார். நீ வாங்கி வைத் திருந்து கடைக்கு வரும் நாளன்று கொண்டு வந்து கொடுத்தால் போதும்'' என்ருர்.

சோமுக்கு அப்போது போன உயிர் திரும்பி வந்தது போலா யிற்று. தான் தப்ப வழி கிடைத் ததையும் நவரத்தின மாலே காணுமல் போனது இன்னும் யாருமே அறியவில்லே என எண்ணி அவன் நேராகப் போய் நகைப் பெட்டியை எடுத்துக் கொண்டு ''போய் வருகிறேன்'' எனத் தன் எஜமானனிடம் கூறிவிட்டு வேக வேகமாகத் தன் வீட்டிற்குப் போனுன்.

மாணிக்கம் மனதிற்குள் சிரித்துக் கொண்டார். அவருக் குத் தெரியும் சோமு காலிப் பெட்டியை எடுத்துப் போகிருன் என்று! அவன் திருடி தன் வீட் டில் ஒளித்து வைத்த நவரத்தின மாலேயை அந்தப் பெட்டியில் வைத்து ஜமீன்தாரரிடம் கண் டிப்பாகச் சேர்த்து விடுவான் என் பதும் அவருக்குத் தெரியும்.

சோமுவும் அப்படித்தான் செய்தான். காலிப்பெட்டியோடு வீட்டிற்குப் போய் மாலே எடுத்து அதில் வைத்து ஜமீன்தாரரிடம் கொடுத்து அவர் கொடுத்தநகைக் கூலிப் பணத்தை வாங்கி வந்தான்.

அவன் மறுநாள் காலேயில் கடைக்குப் போய் மாணிக்கத் திடம் பணத்தைக் கொடுக்கவே ''என்ன? உன்னேப் பிடித்த நோய் போய் விட்டதா? உடம்பு சரியாகி விட்டதா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார்.

அப்போதுதான் சோமுவிற்கு மாணிக்கத்திற்கு தான் நகையைத் திருடியது தெரிந்து விட்டது என்பது தெரிந்தது அவனும் தலே குனிந்தவாறே ''ஆமாம், நேற்றே நான் வீட் டிற்குப் போன சற்று நேரத்திற் கெல்லாம் சரியாகப் போய் விட்டது'' என்ருன்.



# மரத்தை வெட்டி விடு!

பொம்மனும் திம்மனும் அடுத்தடுத்த வீட்டுக்காரர்கள். திம்மன் பேராசை பிடித்தவன். பொம்மனோ விட்டுக் கொடுக்கும் குணம் கொண்டவன். இதனால் திம்மன் வீண் சண்டைக்கு வந்தாலும் பொம்மன் பேசாமல் இருப்பான்.

பொம்மன் வீட்டுத் தென்னை மரம் திம்மன் வீட்டுப் பக்கம் வளைந்து வளர்ந்திருந்தது. அது தள்ளிய முதலாவது குலையை திம்மன் பொம்மனிடம் கேட்காமல் பறித்து எடுத்துக் கொண்டு விட்டான். பொம்மன் அப்போது ''திம்மா! என் மரத்து தேங்காயை எடுத்துக் கொள். வேண்டாம் என்று சொல்லவில்லை. ஆனால் என்னிடம் ஒரு வார்த்தை சொல்லி இருக்கலாமே'' என்றான்.

திம்மனோ ''என் வீட்டுப் பக்கத்தில் உள்ள மரத்தின் காயைப் பறிக்க உன்னிடம் என்ன சொல்வது?'' என்றான், பொம்மன் அது பற்றி ஊர் மணியகாரனிடம் பஞ்சாயத்து செய்யச் சொன்னான்.

மணியகாரனும் திம்மனை அழைத்துக் அவன் கூறியதைக் கேட்டுவிட்டு ''பொம்மா, இவன் சொல்வது சரியே. இவன் வீட்டுப் பக்க மரத்தை இவன் என்ன வேண்டுமானாலும் செய்யலாம். அது போல நீயும் உன் வீட்டுப் பக்கமரத்தை என்ன வேண்டுமானாலும் செய்யலாம். உன் வீட்டில் வளர்ந்த தென்னை மரத்தை வெட்டி விடு'' என்றான்.

திம்மன் திடுக்கிட்டான். பொன்னன் தென்னை மரத்தை வெட்டினால் அது திம்மனின் மாட்டுக் கொட்டிலில் விழுந்து அது அழிந்து விடும். திம்மன் மறுபேச்சு பேசாமல் தான் பறித்த தேங்காய்களைப் பொம்மனிடம் கொடுத்து விட்டான். பொம்மனோ சில தேங்காய்களை திம்மனுக்குக் கொடுத்து அனுப்பினான்.





# குரங்கு செய்த உதவி

ஒரு ஊரில் ஏழைப் பெண் ஒருத்தி இருந்தாள். அவளது ஒரே மகன் கண்ணன். அவளது கணவன் தன் மனைவியையும் மகனையும் பரித விக்க விட்டு இறந்து போய் விட்டான். தந்தை இறந்த பிறகு கண்ணன் ஒரு வேலையும் செய்யா மலும் படிக்காமலும் சோம்பேறி யாகத் திரிந்து காலம் கழிக்க லானான்.

அவனது தாயாருக்கு அவனை எப்படி வழிக்குக் கொண்டு வரு வது என்றே தெரியவில்லை. அவள் சில வீடுகளில் வேலை செய்து பணம் சம்பாதித்து தனக்கும் தன் மகனுக்கும் சாப்பாட்டிற்கு வழி செய்து கொண்டாள்.

கண்ணனின் வீட்டை அடுத்து லட்சாதிபதி லட்சுமணன் இருந் தார். அவர் அயல் நாடுகளுக்கு கப்பலில் போய் வியாபாரம் செய் பவர். மிகவும் நல்லவர் நேர்மை யானவர். அவர் ஒரு முறை வியா பாரத்திற்காகக் கிளம்பும் போது கண்ணனின் தாயார்தான் கஷ்டப் பட்டு சேர்த்த ஐந்து ரூபாய்களை அவரிடம் கொடுத்து ''இதற்கு சீன தேசத்திலிருந்து ஏதாவது வாங்கி வாருங்கள்' அதைக் கொண்டு என் மகனை வியாபாரம் செய்யச் செல்கிறேன்'' என்றாள்.

அவருக்குக் கண்ணனைப் பார்க் கும் போதெல்லாம் 'இந்தப் பையன் வேலை செய்யாமல் இருக் கிறானே' என்ற வருத்தமே ஏற் படும். அவனை அவனது தாய் வியாபாரத்தில் ஈடுபடுத்த முயல் வது கண்டு ''சரி அம்மா. இந்தப் பணத்திற்கு என்ன கிடைத்தாலும் வாங்கி வந்து கொடுக்கிறேன்'' எனக் கூறி அவளிடமிருந்து பணத்தை வாங்கிக் கொண்டார்.

பாபநாசம் சாமா

லட்சுமணன் தன் நண்பர்களான வியாபாரிகளோடு வியாபாரம் செய்யக் கிளம்பினர். கப்பலில் பல நாடுகளுக்குப் போய் வியாபாரம் செய்தார். ஒரு தீவில் உள்ள அபூர்வப் பொருள்களை வாங்கி இன்னொரு தீவில் விற்ருர். அதனுல் நல்ல லாபம் கிடைத்தது. அதைக் கொண்டு அத் தீவில் கிடைத்த அபூர்வப் பொருள்களை வாங்கி வேருெரு தீவில் விற்ருர். இப்படியாக லாபம் அடைவறே முடிவில் அவர் சீன தேசத்தையும் அடைந்தார். அங்கும் அவர் பல பொருள்களை வாங்கிக் கப்பலில் ஏற்றினர். மற்ற வியாபாரிகளும் தம்சரக்குகளோடு கப்பலில் ஏற கப்பலும் சீன தேசத்தை விட்டுக் கிளம்பி மெதுவாகச் சென்றது. கரையிலிருந்து கடலில் கொஞ்ச தூரம் போன போதுதான் கண்ணனின் தாயார் கொடுத்த பணமும் அவள் சொன்னதும் லட்சுமணனின் நினைவிற்கு வந்தது. அவர் உடனே தன் நண்பர்களிடம் விஷயத்தைக் கூறி ''கப்பலைத் திருப்பி கரைக்கு ஓட்டுங்கள். இந்த ஐந்து வெள்ளிப் பணத்திற்கு ஏதாவது வாங்கி வருகிறேன். நான் சொன்ன சொற்படி நடக்க வேண்டாமா?'' என்ருர்.

ஆனுல் மற்ற வியாபாரிகளைக் ''மறுபடியும் கரைக்கா போவது? வேண்டாம். அந்தக் கண்ணனுக்கு நாங்கள் ஆளுக்கு ஐந்து தங்கக் காசுகள் வீதம் கொடுக்





கிறேம். அதை வைத்துக் கொண்டு அவன் வியாபாரம் செய்யட்டும் இந்த ஐந்து வெள்ளிக் காசுகளைக் கொண்டு நீங்கள் மறுபடியும் கரைக்குப் போய் வாங்கும் பொருளை அவன் விற்ருல் கூட நாங்கள் கொடுக்கும் அளவிற்குப் பணம் கிடைக்காது. எனவே நாங்கள் கூறுகிறபடி கேளுங்கள். மறுபடியும் கரைக்குப் போக வேண்டாம். பேசாமல் எம் பணத்தை வாங்கி அவனுக்குக் கொடுங்கள்'' என்ருர்கள். லட்சுமணனும் 'சரி' என்று கூறினர்.

கொஞ்ச நாட்களுக்குப் பிறகு அந்தக் கப்பல் ஒரு தீவை அடைந்தது. அந்தத் தீவில் விசேஷமாக எதுவும் இல்லை. இவர்களது கப்பலைப் பார்த்ததும் பிச்சைக்காரர்கள் தான் ஓடி வந்து நின்ருர்கள். அவர்களில் ஒருவனிடம் மூன்று குரங்குகள் இருந்தன. இரண்டு குரங்குகள் பல வித்தைகளைக் காட்டி எல்லோரையும் மகிழ்வித்தன. ஆனல் ஒரு குரங்கு மட்டும் 'உம்'மென முகத்தை வைத்துக் கொண்டு அசையாமல் உட்கார்ந்திருந்தது.

அப்போது லட்சுமணன் ''சரி. கண்ணனுக்கு இந்தக் குரங்குகளில் ஒன்றை வாங்கிப் போகலாம் ஐந்து வெள்ளிப் பணத்திற்கு வேறு என்ன கிடைக்கப் போகிறது?'' என நினைத்து அந்தக் குரங்காட்டியிடம் குரங்கின் விலையைக் கேட்டார்.

அவனே ''நான் இந்த இரண்டு குரங்குகளைக் கொடுக்க மாட்டேன். இதுதான் என் பிழைப்பு. இவை மூன்றிற்கும் வித்தைகளைக் கற்றுக் கொடுத்தேன். இந்த இரண்டு குரங்குகள் மட்டுமே நான் சொல்லிக் கொடுத்த வித்தைகளைக் கற்றுக் கொண்டு செய்து காட்டுகின்றன. மூன்ருவது குரங்கோ எதுவும் செய்வதில்லை. வேண்டுமானல் இந்த உம்மணு மூஞ்சி குரங்கை ஐந்து வெள்ளிக் காசுகளுக்குக் கொடுக்கிறேன். இதற்கு தண்டத் தீனி போட வேண்டி

இருக்கிறது'' என்றான். லட்சுமணனும் ஐந்து வெள்ளிக் காசுகளைக் கொடுத்து அந்தக் குரங்கை வாங்கிக் கப்பலில் கொண்டு போய் ஓரிடத்தில் கட்டினார்.

அந்தக் கப்பல் அந்தத் தீவை விட்டுக் கிளம்பி சில நாட்களானதும் முத்துத் தீவை அடைந்தது. அங்கு பலர் முத்துச் சிப்பிகளைக் கடலில் மூழ்கி எடுத்துக் கொடுப்பார்கள். வியாபாரிகள் அப்படி வாங்கும் சிப்பிகளில் நல்ல முத்துக்கள் இருந்தால் அவை அவர்களுக்கு நல்ல லாபத்தைக் கொடுக்கும். அப்படிப்பட்ட சிப்பிகள் எல்லோருமே கிடைத்து விடாது. சில சமயங்களில் சிலருக்குத்தான் கிடைக்கும். அதுதான் அவர்களது அதிர்ஷ்டம். இல்லாவிட்டால் எப்படியும் கை நஷ்டம் இராது.

கப்பலில் இருந்து வியாபாரிகள் கரையில் இறங்கினார்கள். லட்சுமணன் தான் வாங்கிய குரங்கோடு கரையில் இறங்கினார். முத்துக் குளிப்பவர்கள் முத்துச் சிப்பிகளை எடுத்து வந்து தம் வியாபாரிகளிடம் கொடுக்கலாயினர். அப்போது லட்சுமணனிடமிருந்த குரங்கும் கடலில் குதித்து முத்துச் சிப்பிகளை ஓரிடத்தில் போடலாயிற்று. லட்சுமணன் அந்தச் சிப்பியிலுள்ள முத்துக்களைக் கண்ணனுக்குக் கொண்டு போய்க் கொடுப்பது எனத் தீர்மானித்துக் கொண்டார். ஏனனில் கண்ணனுக்காக என்று வாங்கிய குரங்கு



தானே கடலில் மூழ்கிச் சிப்பிகளை எடுத்து வந்து போட்டது. எனவே அப்படிக் கிடைக்கும் முத்துங்கள் எல்லாம் கண்ணனுடையதே என்று நேர்மை உள்ளம் படைத்த அவர் எண்ணினுர்.

அன்று வியாபாரிகளுக்குக் கிடைத்த சிப்பிகளில் விலையுயர்ந்த முத்துகள் இருக்கவில்லை. ஆனல் கண்ணனுக்காக லட்சுமணன் வாங்கிய குரங்கு கொண்டு வந்து போட்ட சிப்பிகளில் நல்ல முத்துக்கள் இருந்தன. முத்துக் குளிப்பவர்களில் சிலர் ''ஓ! இந்த குரங்கு முன்பு இங்கே ஒருவரிடம் இருந்து முத்துச் சிப்பி எடுக்கப் பழக்கப்பட்டதாயிற்றே'' என்ருர்கள்.

லட்சுமணன் அது கேட்டு மகிழ்ந்தார். அவர் தம் ஊர் திரும்பியதும் கண்ணனின் தாயாரையும் அவனையும் அழைத்து ''இந்தக் குரங்கை நான் கண்ணனுக்காக வாங்கினேன். இது பொறுக்கிய முத்துக்கள் இவை'' எனக் கூறி முத்துகளைக் கொடுத்து குரங்கையும் கொடுத்தார். அதோடு கப்பலில் மற்ற வியாபாரிகள் ஐந்து பொற்காசுகள் வீதம் கண்ணனுக்குக் கொடுத்ததையும் அவர்களிடமே கொடுத்தார்.

பிறகு அவர் ''இவை எல்லாம் உன் பணமும் பொருளும் ஆகும். உன் பணத்தால் வாங்கிய குரங்கு மிகவும் நன்ருக முத்துக் குளிக்கும். நீயும் அடிக்கடி இதனை முத்துத் தீவிற்கு அழைத்துப் போ. இது அங்கு கடலில் மூழ்கி முத்துச் சிப்பிகளைக் கொண்டு வரும். உனக்கு நல்ல முத்துகள் கிடைக்கும். நல்ல விதமாக வியாபாரம் செய்யலாம்'' என்ருர்.

கண்ணனும் அவரை வணங்கி வியாபாரத்தைத் தொடங்கினுன். நாளடைவில் நல்ல லாபம் கிடைத்தது பெரிய பணக்காரனுகி அவன் தன் தாயாருடன் சுகமாக வாழ்ந்து வந்தான்.






கருப்பையா ஒரு வட்டிக் கடையை நடத்தி வந்தான். அவன் கடன் வாங்க வருபவர்களின் அவசர அவசியத்தைப் பயன்படுத்திக் கொண்டு வட்டியைக் கறப்பதில் மன்னன். ஒரு முறை ராமய்யன் என்பவன் அவனிடம் போய் ''ஐயா, அடுத்த மாதம் என் பெண்ணிற்குக் கல்யாணம் செய்யப் போகிறேன். அதற்கு பத்தாயிரம் ரூபாய் வேண்டும். அந்தக் கடனைக் கொஞ்சம் கொஞ்சமாக அடைத்து விடுகிறேன்'' என்றான்.

ராமய்யனுக்கு அவ்வளவு பெரிய தொகையைக் கொடுப்பவன் அவ்வூரில் வேறு யாரும் இல்லை. எனவே கருப்பையா வட்டியை அதிகமாகக் கூறினான். அப்போது ராமய்யன் ''அடேயப்பா! இவ்வளவு வட்டி கொடுக்க முடியாது என் முன்னோர்கள் வைத்துப் போன பழைய வீட்டை விற்றாவது கல்யாணத்தை நடத்துகிறேன்'' எனக் கூறி எழுந்தான்.

ஒரு நல்ல பேரம் கையை விட்டு நழுவுவது கண்டு கருப்பையா மனம் புழுங்கினான். ராமய்யன் வீட்டை யாரும் வாங்காமல் செய்து தான் மலிவாகத் தட்டிக் கொண்டு விடலாம் என அவன் எண்ணி அன்று முதல் ராமய்யனின் பழைய வீட்டில் பேய் பிசாசு உள்ளது என்ற வதந்தியைக் கிளப்பி விட்டான். இதனால் ராமய்யனால் வீட்டை விற்க முடியவில்லை. பார்த்தவர்கள் எல்லாம் இது பேய் பிடித்த வீடு எனக் கூறலானார்கள்.

அந்த சமயத்தில் கருப்பையாவின் நெருங்கிய நண்பரான கஜபதி என்ற ஜமீன்தாரர் அவன்

மாயவரம் மாணிக்கவாசகன்

வீட்டிற்கு வந்தார். அவர் அவ்வூரில் தங்கி விட்டு ராமய்யாவின் வீட்டைப் பார்த்தார். அவர் கருப்பைய்பாவிடம் ''இந்த ஊரில் ஒரு பழைய வீடு இருக்கிறது. அது ராமய்யா என்பவருடையதாம். அது மாதிரி இப்போது லட்சம் ரூபாய் போட்டாலும் கட்ட முடியாது. அதை நான் லட்ச ரூபாய்க்கு வாங்கிக் கொள்வேன்" என்ருர்.

அது கேட்டு கருப்பைய்யாவின் மனதில் பேராசை ஏற்பட்டது. ராமய்யாவிடம் அதைப் பத்தாயிரத்திற்கு வாங்கி ஜமீன்தாரருக்கு லட்சம் ரூபாய்க்கு விற்ருல் நல்ல லாபமே என எண்ணிஞன்.

ஜமீன்தாரர் ஊரை விட்டுப் போனதும் அவன் ராமய்யாவை அழைத்து அவன் வீட்டைத் தனக்கு பத்தாயிரம் ரூபாய்க்கு விற்கும்படி சொன்ஞன். விஷயம் ஏதோ உள்ளது என அறிந்த ராமய்யா ''என் வீட்டைப் பத்தாயிரத்திற்குக் கொடுப்பதாகச் சொல்லவில்லையே. என் பெண் கல்யாணத்திற்குத்தான் பத்தாயிரம் கடன் கேட்டேன் அதன் விலை ஐம்பதாயிரம் ரூபாய்" என்ருன்.

கருப்பைய்யா பதில் பேசாமல் ஐம்பதாயிரம் ரூபாய் கொடுத்து அந்த வீட்டை ராமய்யாவிடமிருந்து வாங்கி விட்டான். ஜமீன்தாரருக்கு லட்சம் ரூபாய்க்கு விற்ருல் ஐம்பதாயிரம் லாபமாயிற்றே. ஆஞல் அவன் ஜமீன்தாரருக்கு எழுதிய போது அவர் ''நான் அந்த வீட்டை வாங்கவில்லை. அது பேய் பிடித்த வீடாம்'' என்று பதில் எழுதி விட்டார்.

கருப்பைய்யா இடிந்து போய் விட்டான். ராமய்யாவோ இருபதாயிரம் பெறும் தன் வீட்டிற்கு ஐம்பதாயிரம் கிடைத்ததால் மகிழ்ந்து மகளின் திருமணத்தை விமரிசையாக நடத்திஞன்.






ஒருமுறை நாரதர் பூவுலகில் சஞ்சாரம் செய்து கொண்டிருந்த போது வியாச முனிவரின் ஆசிரமத்திற்கு வந்தார். வியாசரும் அவரை வரவேற்று உபசரித்து ''நாரதரே! இவ்வுலக வாழ்க்கையில் சுகமே இல்லையா மனிதன் சம்சார பந்தத்தில் சிக்கி விட்டால் எவ்வளவு கஷ்டப்பட வேண்டி இருக்கிறது? ஆசை, பாசம், விருப்பு வெறுப்பு இவற்றிற்கெல்லாம் ஆளாகி அவன் பல வித இன்னல்களையும் அனுபவிக்கிறான். அவனுக்கு நிம்மதி என்பது கொஞ்சமும் இருப்பதே இல்லை.'' எனசொல்லித் தன் அனுபவத்தைக் கூறினார். வியாசர் பிறந்த போதே அவரது தாய் அவரை விட்டுப் பிரிந்தாள். அவர் தவம் செய்தே மகப் பேறு பெற்றார். அந்த மகனே தன் தந்தையைத் துக்கத்தில் ஆழ்த்தி விட்டு எங்கோ போய் விட்டான். உலக வாழ்வில் இதனால் விரக்தி அடைந்த போதிலும் வியாசர் மறுபடியும் சம்சாரபந்தத்தில் சிக்கிக் கொண்டார். அவரது தாய் சத்தியவதி சந்தனு மன்னனை மணந்து முதலில் கணவனையும் பிறகு மகன்களையும் இழந்தாள். குருடனான திருதராஷ்டிரன், ரத்தசோகை பிடித்த பாண்டு, வேலைக்காரியின் புதல்வனாகு விதுரன் ஆகியவர் பிறக்க வழி செய்ய வேண்டும் என சத்தியவதி வியாசரிடம் வேண்ட

நாரதரின் இல்வாழ்க்கை



அவரும் அவளது மருமகள்கள் அவர்களைப் பெற்றெடுக்கச் செய்தார். இம் மூவரும் வியாசரின் மகன்களான போதிலும் ஒருவன் கூட அவருக்கு பித்திரு தர்ப்பணம், பிண்டப் பிரதானம் முதலிய சடங்குகள் செய்ய அருகதை பெற்றிருக்கவில்லை.

பின்னர் முதல் இரு மகன் களுக்கும் பிறந்த கௌரவர்களும் பாண்டவர்களும் சண்டை செய் ததினுல் வம்சத்தையே அநேகமாக அழித்தார்கள். இப்படிப் பல கஷ்டங்களை அனுபவித்த வியாசர். ''இந்த உலகில் தந்தை, மகன் பேரன், பேத்தி, என்பதெல்லாம் வெறும் பிரமை. மாயை. இப்படி மதியைக் கலக்கும் விஷயங்களிலிருந்து விடுதலை பெற என்னவழி? சம்சார பந்தத்தில் சிக்கிவிட்டால் சுகம் ஏது? கொஞ்சமும் கிடையாது. சம்சாரம் ஒரு மாபெரும் கடல் போன்றது. அதில் வரும் அலைகளுக்கு முடிவே இல்லாதது போலத்தான் அதுவும்.'' என்று நாரதரிடம் கேட்டார்.

நாரதரும் ''சம்சார பந்தத்தில் சிக்கியவன் அதிலிருந்து சுலபத்தில் விடுபட ஆசைபடுவானு? திரிமூர்த்திகளுக்கே அந்த ஆசை விடவில்லையே. என்னையும் மகாஞானி என்கிருர்களே என் கதை மட்டும் என்ன? நானும் ஒரு சமயம் சம்சார பந்தத்தில் ஆசைப்பட்டு சிக்கினவன் தானே ஒரு மனைவியை நான் அடைய என்ன செய்தேன் என்பதைக் கூறுகிறேன்'' என வியாசருக்குத் தம் கதையைக் கூறலானுர்.

நாரதரும் பர்வதனும் சேர்ந்து ஒரு நாள் பூலோக சஞ்சாரம் செய்து கொண்டிருந்தார்கள். அப்போது அவர்கள் ஒருவர் மனதில் உள்ளதைச் சற்றும் மறைக்காமல் மற்றவரிடம்கூறிக் கொள்வது எனவும் ஒப்பந்தம் செய்து கொண்டார்கள்.

அவர்கள் இப்படியே போய்க் கொண்டிருக்கையில் கோடை

காலம் முடிந்து மழைகாலம் ஆரம்பித்து விட்டது. மழை பெய்யும் நான்கு மாத கால மும் அறிஞர்களும் துறவிகளும் ஒரு இடத்தில் நிலையாகஇருந்து சாதுர்மாச விரதம் என்று அனுஷ்டிப்பார்கள்.

நாரதரும் பர்வதனும் சஞ்ஜ யன் என்ற மன்னனின் மாளிகை யில் போய்த் தங்கி தங்களது சாதுர்மாச விரதத்தை மேற் கொண்டு அங்கேயே நான்கு மாதங் களைக் கழிக்கலானார்கள். சஞ்ஜய னின் மகள் மதயந்தி அவர்களுக் குப் பணி விடைகளைச் செய்து வரலானாள். அவள் கொஞ்ச நாட்கள் வரை இருவரையும் சமமாகவே பாவித்து உபசரிப்பு களைச் செய்தாள். கொஞ்ச நாட் களுக்குப் பிறகு அவளது மனம் மாறலாயிற்று. அவள் பர்வதனை விட நாரதரையே மிகவும் அக் கறையுடன் கவனிக்கலானாள். பர்வதனுக்கு அவ்வளவாக உப சரிப்பை அவள் செய்யவில்லை. ஏனெனில் நாரதரின் வீணாகான மும் சாமவேதகானமும் கேட்டு அவள் மனம் அவர்பால் செல்ல லாயிற்று.

எனவே அவருக்கு அவள் விசேஷ முறையில் உபசரிப்பு களைச் செய்யலானாள். இதனால் நாரதரின் மனமும் அவள்பால் சென்றது. குளிப்பு, ஆடை, போஜனம் முதலியவற்றில் தன்னைவிட மதயந்தி நாரதரை அக்கறையுடன் கவனித்துக் கொள் வது கண்டு பர்வதன் ஒரு நாள் நாரதரிடம் தனிமையில் "அரச குமாரியின் போக்கைப் பார்த் தால் அவள் உன்னை விரும்புவது போலத் தெரிகிறது உனக்கும் அவள் மீது ஆசை ஏற்பட்டிருப்ப தும் தெரிகிறது. இந்த விஷயத்தை நீ என்னிடம் சொல்லாமல் மறைக் கிறாயே. நாம் ஆரம்பத்தில் செய்து கொண்ட ஒப்பந்தத்தை மறந்து விட்டாயா?" என்று கேட்டான். நாரதரும் வெட்கப் பட்டவராக "இதில் மறைக்க





என்ன இருக்கிறது? அவள் என்னை விரும்புகிறாள். நானும் அவள் மீது ஆசைப் படுகிறேன்'' என்றார். அதைக் கேட்ட பர்வதன் கோபம் கொண்டு ''நாம்செய்து கொண்ட ஒப்பந்தத்தை மீறி விட்டாய். எனவே உன் முகம் குரங்கு முகமாக ஆகி விடட்டும்'' என்று சபித்தான்.

நாரதரும் ஆத்திரத்தோடு ''நீ இந்த அற்ப குற்றத்திற்காக என்னை சபித்து விட்டாய். உனக்கு சொர்க்கமே கிடைக்காமல் போகட்டும் நீ பூலோகத்திலேயே இருக்கக் கடவாய்'' என்று சபித்தார். நாரதரின் முகம் குரங்கினுடையது போலாகி விட்டது. ஆனாலும் மதயந்தி நாரதரை வெறுக்கவில்லை. அவரது முகம் குரங்கினுடையது போலாகி விட்டதாலும் அவள் கவலைப்படவில்லை. அப்போதும் அவள் பர்வதனை விட நாரதரையே அதிக அக்கரையுடன் கவனிக்கலானாள். நாரதரின் வீணா கானத்தையும் சாமகானத்தையும் கேட்டு மகிழ்ந்தும் அவருக்குத் தொடர்ந்து பணி விடைகளைச் செய்தும் வரலானாள். பர்வதனோ கோபித்துக் கொண்டு போய் விட்டான்.

சஞ்ஜயன் தன் மகளுக்குச் சுயம்வரம் நடத்தத் தீர்மானித்தான். அது பற்றித் தன் அமைச்சரையும் கலந்து ஆலோசித்தான். தன் தந்தை தனக்கு மணம் செய்து வைக்க முயற்சிப்பது கண்டு மதயந்தி தன் தந்தையிடம் ''நான் நாரதரைத் தவிர வேறு யாரையும் மணக்க மாட்டேன்'' என்றாள்.

அப்போது அங்கே இருந்த அவளது தாய் ''போயும் போயும் `குரங்கு முகம் உள்ளவனையா நீ மணக்கப் போகிறாய்? மழை காலம் முடிந்தால் உலகத்தைச் சுற்றக் கிளம்பி விடுவானே: ஒரு நிலையில் இல்லாதவனையா நீ கல்யாணம் செய்து கொள்வது? நாரதரைப் பற்றி எங்களுக்குத்



தெரியாதா? அவர் ஓரிடத்தில் நிலைத்து இருக்கமாட்டார். சப்த லோதங்களிலும் சுற்றிக் கொண்டே எங்கே என்ன நடக்கிறது என விசாரித்துக் கொண்டே போவாரே? இவரையா நீ மணக்கப் போகிறாய்? இது எனக்கும் உன் தந்தைக்கும் எவ்வளவு மன வருத்தத்தைக் கொடுக்கிறது தெரியுமா?'' என்று கூறினாள்.

ஆனால் மதயந்தியோ ''அம்மா மூக்கும் முழியுமாக லட்சணமாக இருந்தால் மட்டும் நல்லவனாகி விடுவானா? ஒன்றுமே தெரியாதவனாக, மக்காக இருந்தால் என்ன பயன்? நாரதரின் சங்கீத ஞானம் என்ற பொக்கிஷம் இருக்கும் போது அவரது முகம் எப்படி இருந்தால் என்ன? இவரது சங்கீதத்தில் மான்கள் மயங்குகின்றன. இவரைப் போன்ற இசைவாணர் மூன்று உலகங்களிலும் இல்லை. இவரது இசையை அனுபவிக்கும் சக்தி வேண்டும். இவரது இசையை நான் இவருக்குக் குரங்குமுகம் வரும் முன்பே கேட்டு மகிழ்ந்து லயித்து விட்டேன். எனவே நான் கொண்ட ஆசை மாறாது. படிப்பின் முன் அழகு எம்மாத்திரம்? எனவே என் மனம் நாரதரிடம் லயித்து விட்டது. அது இனி மாறாது. எனவே என்னை அவருக்கே மணம் செய்து வைத்து விடுங்கள்'' என்றாள்.

அது கேட்டு சஞ்ஜயனும் தன் மகளின் இஷ்டப்படியே அவளை நாரதருக்கே மண முடித்து வைத்தான். நாரதரும் மாமனாரின் வீட்டிலேயேஇருந்து விட்டார். அவர் தன் குரங்கு முகத்தை நினைத்து நினைத்து மனம் வருந்தலானார். ஆனால் மதயந்தியோ அதுபற்றிச் சற்றும் கவலைப்படவில்லை.

இப்படியே சில நாட்களாயின. பர்வதனும் பூலோகத்தைச் சுற்றிச் சுற்றி அலுத்துப் போனான். அவன் நாரதரைக்



காண வந்தான். தான் கொடுத்த சாபத்தால் நாரதரின் முகம் குரங்கினுடையகாக மாறியது கண்டு அவன்'' நான் என் சாபத்தைத் திரும்பப் பெறுகிறேன். உன் முகம் முன்போல ஆகிவிடட்டும்'' என்றார்.

நாரதரும் ''நானும் ஆத்திரப் பட்டு உன்னைச் சபித்து விட்டேன். நான் கொடுத்த சாபத்தைத் திரும்பப் பெறுகிறேன். நீ இனி சொர்க்கத்திற்குப் போகலாம்'' என்றார். பர்வதனும் மகிழ்ந்து போய் விடை பெற்றுக் கொண்டு சென்றான். நாரதரின் முகம் முன்போலாகி விட்டது. அது கண்டு எல்லோரும் மகிழ்ந்து போனார்கள், இப்படியாக நாரதர் பல கஷ்டங்களை அனுபவித்துக் குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டார்.

இக்கதையைக் கூறி விட்டு நாரதர் தன் மற்றொரு அனுபவத்தையும் வியாசரிடம் கூறினார்.

ஒருமுறை அவர் சுவேத தீபத்தில் விஷ்ணுவைக் காணப் போனார். லட்சுமி தேவி நாரதரைக் கண்டதும் சட்டென எழுந்து உள்ளே போய் விட்டாள். இதைக் கண்டு நாரதர் ''என்னைக் கண்டு ஏன் லட்சுமி தேவி ஏன் எழுந்து போக வேண்டும்? நான் போக்கிரியா? துஷ்டனா? ஐம்புலன்களையும், நான் அடக்கியவனாயிற்றே. இப்படிப்பட்ட என்னைப்பார்த்து லட்சுமிதேவி எழுந்து போனது என்னை அவமானப் படுத்துவது போலத்தானே'' என்றார்.

அதைக் கேட்டு விஷ்ணு, ''நாரதா! சற்று அமைதியுடன் கேள். அன்னிய புருஷர்கள் முன் கணவன் எதிரே மனைவி உட்கார்ந்து இருப்பது அழகல்ல. என்னதான் மனதைக் கட்டுப் படுத்தியவர்களாக இருந்தாலும் சமயத்தில் மனம் சபலம் அடைந்து விடும். திரி

மூர்த்திகளான நாங்களே சபலம் அடைந்திருக்கிறோமே'' என்ருர். பிறகு அவர் நாரதரை கருடனின் மீது உட்கார வைத்துக் கொண்டு எங்கோ அவரை அழைத்துக் கொண்டு சென்ருர்.

கான்யகுப்ஜம் என்ற ஊரின் பக்கம் ஒரு ஏரி இருந்தது. அதில் தாமரைப் பூக்கள் நிறைய இருந்தன. விஷ்ணு நாரதரை அந்தக் குளத்திற்கு அழைத்துப் போய் அந்தக் குளத்தில் குளித்து வரச் சொன்னர். நாரதரும் தம் வீணையையும் மான் தோலையும் ஓரிடத்தில் வைத்து விட்டுக் குளத்தில் குளிக்க இறங்கினர். அப்போது அவர் ஒரு பெண்ணுக மாறி விட்டார். ஆனல் இதை நாரதர் அறியவில்லை. விஷ்ணுவோ நாரதரின் வீணையையும் மான் தோலையும் எடுத்துக் கொண்டு கருடன் மீது அமர்ந்து சென்று விட்டார்.

நாரதர் பெண்ணுகி குளத்திலிருந்து வெளியே வந்தபோது அவருக்குத் தன் வீணையைப் பற்றியோ விஷ்ணுவைப் பற்றியோ நினேவே இருக்கவில்லை. ஏனெனில் விஷ்ணுபகவான் தன் மாயா சக்தியினுல் அவரை அவ்வாறு செய்து விட்டார். அதனுல் நாரதர் தன்னே ஒரு பெண் என்றேதான் எண்ணிக்



கொண்டு இருந்தார். அவர் குளத்திலிருந்து பெண் உருவில் வெளியே வந்து கரையில் நின்ருர். அப்போது அவ்வழியே தாளத்துவன் என்ற மன்னன் தன் பரிவாரங்களோடு வந்தான். அவன் அங்கே பெண் உருவில் இருந்த நாரதரைப் பார்த்து அவள் மீது ஆசைப்பட்டு அவளே மணக்க அவளது சம்மதம் கேட்டான். அவளும் சரி எனவே மன்னன் அவளேத் தன் நகருக்கு அழைத்துப் போய் மணம் புரிந்து கொண்டான்.

ஸ்திரீயாக இருந்த நாரதர் பனி ரெண்டு ஆண்டுகள் குடித்தனம் நடத்தினர். அவருக்கு

வீரவர்மன் என்ற மகனும் பிறந்தான். அதன் பின்னும் பல குழந்தைகளை அவர் பெற்று எடுத்தார். அந்த மகன்களும் பெரியவர்களாகி மணம் புரிந்து கொண்டு குழந்தைகளைப் பெற்றனர். இப்படியாக அந்த வம்சம் பெருகலாயிற்று. கொஞ்ச காலத்திற்குப் பின் கான்ய குப்ஜத்தின் மீது எதிரிகள் படை எடுக்க நாரதரின் மகன்களும், அவர்கள் பெற்றெடுத்த மகன்களும் போரில் மடிந்தார்கள். நாரதருக்கு ஒரே துக்கமாகப் போயிற்று,

அப்போது விஷ்ணு ஒருகிழப் பிராம்மணர் உருவில் நாரதரிடம் வந்து ''மகள் யார் தாய் யார்? எல்லாம் வீண் பிரமை மாயை. முதலில் நீ போய் குளித்து விட்டு வா'' என்ருர். அவர் ஸ்திரீ உருவில் இருந்த நாரதரை அழைத்துப் போய் ஒரு குளத்தைக் காட்டி அதில் இறங்கிக் குளிக்கச் சொன்னர். நாரதர் அதில் இறங்கிக் குளித்தார். அவரது பெண் உருவம் போய் விட்டது. அவர் தான் பெண்ணுக இருந்து வாழ்க்கை நடத்தியதையும் மறந்தே விட்டார். அவருக்கு முந்தைய நினைவு வந்து விட்டது.

கரையில் அப்போது விஷ்ணு அவரது வீணையையும் மான் தோலையும் வரவழைத்து ''நாரதா! இவ்வளவு நேரமா நீ குளித்து விட்டு வர?'' என்ருர். அப்போது நாரதருக்குத்தான் விஷ்ணுவோடு வந்தது நினைவிற்கு வந்தது. அவருக்குத்தான் பெண்ணுகி வாழ்க்கை நடத்தியது எல்லாம் கொஞ்சம் கூட நினைவில் இல்லை. ஆனல் தாளத்துவஜன் மட்டும் தன் மனைவி ஆணுக மாறிப் போனது பற்றி மனம் வருந்தினன். விஷ்ணு அவனுக்கு வேதாந்த உபதேசம் செய்து அனுப்பி விட்டார். மாயையில் சிக்கினல் அடையும் நிலையை நாரதர் அப்போது உணர்ந்தார்.



# முடிவே இல்லை!

ஏகாம்பரத்திற்கு இரண்டு மனைவிகள் இருந்தனர். இருவரும் எப்போதும் சண்டை போட்டுக் கொண்டே இருப்பார்கள். அதற்கு ஒரு முடிவு கட்ட ஏகாம்பரம் ஒரு நாள் வேறு ஊருக்குப் போவதாகச் சொல்லிவிட்டு கிளம்பினான். ஆனால் ஊருக்குப் போகாமல் அவ்வூர் சத்திரத்துக்குப் போய் பயங்கரமாக வேஷம் போட்டுக் கொண்டு அன்றிரவு தன் வீட்டிற்குப் போய்க் கதவைத் தட்டினான். அவனது இரு மனைவிகளும் சன்னல் வழியாகப் பார்த்து 'ஓ'வென அலறினார்கள்.

''கதவைத் திறக்கிறீர்களா இல்லையா'' என்று அவன் தன் குரலை கரகரத்த குரலாக மாற்றிக் கொண்டு மிரட்டினான். அந்த இரு மனைவிகளும் சற்று யோசித்து ஆளுக்கு ஒரு உலக்கையை கையில் எடுத்துக் கொண்டு கதவை திறந்தனர். ''யாரடா நீ'' என உலக்கையை அவர்கள் ஆட்டவே ஏகாம்பரம் பயந்து ஓடிவிட்டான். அப்படி ஓடியபோது அவனது பணப்பை கீழே விழுந்து விட்டது. அதில் நூறு ரூபாய் இருந்தது. அந்தப் பணத்தை அவர்கள் பங்கு போட்டுக் கொண்டு சண்டை போடமாட்டார்கள் என ஏகாம்பரம் எதிர்பார்த்தான்.

ஆனால் அவர்களோ ''என்னைப் பார்த்தே திருடன் ஓடினான். எனக்கே பணம்'' என கூறிக்கொண்டு சண்டைபோட்டார்கள். இதைக் கண்ட ஏகாம்பரம் ''இதற்கு முடிவே இல்லையா'' என நினைத்தான்.





# மோகினிப்பிசாசுகள்

நரியூருக்குப் பக்கமாக ஒரு பாழடைந்த வீடு இருந்தது. அந்த வீட்டின் முன் ஒரு பெரிய ஆலமரம் இருந்தது. பகலில் வழிப்போக்கர்கள் அதன் நிழலில் தங்கி இளைப்பாறுவார்கள். ஆனால் இருட்டிய பின் அந்தப் பக்கம் யாருமே போகமாட்டார்கள் ஏன் என்றால் அந்தப் பாழடைந்த வீட்டில் மோகினிப் பிசாசுகள் இருப்பதாயும் இரவு வேளைகளில் வளையல்கள் குலுங்கும் சத்தமும் சலங்கைகள் ஒலிக்கும் சத்தமும் கேட்பதாயும் பலர் பேசிக் கொண்டனர்.

நரியூரின் மூன்று வாலிபர்கள் அந்த மோகினிப் பிசாசுகளைப் பார்த்து வருவது எனத் தீர்மானித்து ஒரு நாள் இரவு அந்த வீட்டின் பக்கம் சென்றார்கள். ஆனால் செம்மையாக உதை வாங்கிக் கொண்டு அவர்கள் ஊருக்கு ஓடி வந்தார்கள். இந்த மோகினிப் பிசாசுகளைப் பற்றிய செய்தி பல ஊர்களுக்குப் பரவியது. பட்டணத்திலிருந்து பரமகுரு என்பவன் நரியூருக்கு வந்து இருட்டியதும் பாழடைந்த வீட்டிற்குப் பக்கத்திலிருந்த ஆலமரத்தின் கிளை மீது ஏறி உட்கார்ந்து கொண்டான். பாழடைந்த வீட்டிலிருந்து சலங்கை சத்தமும் வளையல்கள் குலுங்கும் சத்தமும் அவன் காதில் இரவு முழுவதிலும் அவ்வப்போது விழுந்து கொண்டே இருந்தது. மறுநாள் காலை அவன் பட்டணத்திற்கு திரும்பிச் சென்றான்.

இதற்குப் பத்து நாட்களுக்குப் பின் நரியூருக்கு பொம்மலாட்ட கோஷ்டி ஒன்று வந்தது. அதில் பெண்களும் ஆண்களுமாகப் பத்து பேர்கள் இருந்தார்கள். கோஷ்டியின் தலைவன் ஊர் பிரமு

அனுராதா ராஜகோபாலன்

கர்களிடம் தங்களது பொம்மலாட்டத்தைப் பாழடைந்த வீட்டின் முன் ஆலமரத்தடியே காட்டுவதாகக் கூறினன்.

சிலர் அங்கே மோகினிப் பிசாசுகள் இருப்பதால் வேண்டாம் எனக் கூறினர்கள். கோஷ்டியின் தலைவனே ''எங்கள் ஆட்டத்தில் ஆஞ்சநேயர் வருவதால் பிசாசுகள் ஒன்றும் செய்யாமல் பயந்து ஓடி விடும்'' என்றன்.

அப்படியும் மூன்று பிரமுகர்கள் ''அங்கே பொம்மலாட்டம் நடத்தக் கூடாது'' எனக் கூறினர்கள். கோஷ்டியின் தலைவனே ''யார் வந்தாலும் வரா விட்டாலும் நாங்கள் அங்கே தான் ஆட்டத்தை நடத்தப் போகிறேம்'' எனக் கூறி விட்டான்.

அன்று மாலை அந்த ஆலமரத்தடியே பொம்மலாட்டம் நடப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளை அந்த கோஷ்டியின் தலைவன் செய்தான். இரவு ஒன்பது மணிக்கு ஆட்டம் ஆரம்பமாகியது. துணிச்சல்காரரர்களான சிலர் ஆட்டத்தைப் பார்க்க வந்து உட்கார்ந்தனர்.

பத்து மணி சுமாருக்கு திடீரென எங்கு இருந்தோ எலும்புத் துண்டுகள் வந்து கூட்டத்தில் விழலாயின. அது கண்டு பயந்து எல்லோரும் எழுந்து ஓடினர். பொம்



மலாட்ட கோஷ்டி போகவில்லை. கோஷ்டியின் தலைவன் திரையில் அனுமாரின் உருவத்தைக் காட்டச் சொன்னன். அனுமார் தோத்திரத்தையும் பாடினர்கள். அப்போதும் எலும்புத் துண்டுகள் வந்து விழுந்தன.

சற்று நேரத்தில் பாழடைந்த வீட்டிலிருந்து சலங்கை ஒலியும் வளையல்கள் குலுங்கும் சத்தமும் அக்கோஷ்டியினருக்குக் கேட்டன. அதன் பிறகு ஆறு முரடர்கள் அந்த வீட்டிலிருந்து வந்து பொம்மலாட்ட கோஷ்டியினரைச் சூழ்ந்து கொண்டார்கள்.

''அடே! உங்கள் அனுமான் எங்களை ஒன்றும் செய்து விட முடி

யாது'' எனக் கூறிக் கொண்டிருக்கும் போதே பொம்மலாட்ட கோஷ்டியினர் அந்த முரடர்களைத் தாக்கி அவர்களது கைகளில் இருந்த தடிகளையே பிடுங்கி அவர்களை அடித்து வீழ்த்தினார்கள்

முரடர்கள் இதை எதிர்பார்க்கவில்லை. அதற்குள் பொம்மலாட்டக்காரர்கள் அந்த முரடர்களைப் பிடித்து மரத்தில் கட்டிப் போட்டார்கள். அதன் பிறகு அக்கோஷ்டியினர் பாழடைந்த வீட்டிற்குள் போய்ப் பார்த்தார்கள் உள்ளே பல வளையல்களும் சலங்கைகளும் ஒரு அறையில் இருந்தன.

அந்த முரடர்களை அடித்து மிரட்டியதில் அவர்கள் தாம் நரியூரில் மூன்று பிரமுகர்களின் அடியாட்கள் என்றும் அவர்கள் அந்தப் பாழடைந்த வீட்டை சூதாட்டம், குடி போன்ற கெட்ட செயல்களுக்கு உபயோகப்படுத்தி வருகிறார்கள் என்பதும் பொம்மலாட்ட கோஷ்டிக்குத் தெரிந்தது. இந்த முரடர்கள் வளையல்களையும் சலங்கைகளையும் ஆட்டி எல்லோரையும் அந்த வீட்டில் மோகினிப் பிசாசுகள் இருப்பதாக நம்பவைத்தார்களாம்.

பொம்மலாட்ட கோஷ்டி உண்மையில் ரகசிய போலீசார். பரமகுரு தான் அவர்களை அங்கு அனுப்பியவன். பொம்மலாட்டம் என்று அவர்கள் வேஷம் போட்டு வந்து அவர்களைப் பிடிக்க ஏற்பாடு செய்தார்கள்.

அன்றிரவே நரியூரில் அந்த மூன்று பிரமுகர்களின் வீடுகளும் சோதனை இடப்பட்டன. பல விலையுயர்ந்த திருட்டுப் பொருள்களும் போதை தரும் பொருள்களும் கைப்பற்றப்பட்டன. 'அம்மூவரும் கைது செய்யப்பட்டு பட்டணத்திற்கு கொண்டு போகப் பட்டார்கள். இவர்களா மோகினி பிசாசுகள் என்று அப்போது நரியூர் மக்கள் ஆச்சரியப் பட்டார்கள்.



# முறைகள் வேறு; முடிவு ஒன்றே

பெரும் புதூரில் மூன்று சகோதரர்கள் இருந்தார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் ஒரு வேலையை வேறு வேறு விதமாகச் செய்து முடிப்பார்கள் எனக் காஞ்சி மன்னன் கேள்விப்பட்டு அவர்கள் மூவரையும் ஒரு குறிப்பிட்ட நாளன்று தன் தர்பாருக்கு வரச் சொன்னான். அவர்கள் வர வேண்டிய நேரமும் குறிப்பிடப்பட்டிருந்தது.

மூவரும் குறிப்பிட்ட நாளில் குறித்த நேரத்தில் வந்தார்கள். ஆனால் மூவரும் மூன்று வாசல்கள் வழியாக வந்தது கண்டு மன்னன் ஆச்சரியப்பட்டான். அவர்கள் மூவருக்கும் மூன்று பாத்திரங்களில் குடிக்க இனிய பானம் கொடுக்கப்பட்டது.

ஒருவன் உடனேயே குடித்தான். இரண்டாவதவன் எல்லோரும் குடிப்பது போலக் குடித்தான். மூன்றாவதவன் கொஞ்சம் கொஞ்சமாகக் குடித்தான். முதலாவதவன் தனது பாத்திரத்தை நேராக வைத்தான். இரண்டாவதவன் படுக்க வைத்தான். மூன்றாவதவனோ தலைகீழாகக் கவிழ்த்து வைத்தான். மேலும் பானம் குடிக்கக் கொண்டு வரப்படவே கொண்டு வரவே முதலாவதவன் பாத்திரத்தில் விடச் சொன்னான். இரண்டாவதவன் தனது பாத்திரத்தில் விட முடியுமானால் விடச் சொன்னான். மூன்றாவதவனோ வேண்டாம் என்றான்.

அரசன் மூவரது அறிவையும் பாராட்டி அவர்களுக்குப் பல பரிசுகளை அளித்தான்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 25

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1980 அக்டோபர் மாத இதழில் வெளியிடப்படும்**



Brahmdev





Brahmdev

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.

★ ஆகஸ்ட் 10 தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 25 பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே.

★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி அம்புலிமாமா 'போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-26 என்ற முகவரிக்கு அனுப்பவும்.

---

## ஜூன் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **தெய்வீகம் தவழும் பிஞ்சு முகம்**

இரண்டாவது போட்டோ: **தெய்வீகம் தவழும் ஜோதி முகம்**

பரிசு பெற்றவர்: **எம். எஸ் சுப்பலெட்சுமி,**

மனேகர் புக்கர் சாலை, கல்கத்தா-26.

**பரிசுத் தொகை ரூ. 25 ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.**

Printed by B. V. REDDI at Prasad Process Private Ltd., and Published by B. VISWANATHA REDDI for CHANDAMAMA CHILDREN'S TRUST FUND (Prop. of Chandamama Publications) 188, Arcot Road, Madras-600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


"அம்மா, எங்க ஸ்கூல்ல காஷ்மீருக்கு உல்லாசப் பிரயாணம் போருங்க. அம்மா, அம்மா நானும் போறேம்மா"


"உம்..ம்... அதுக்கு நம்பகிட்ட பணம் ஏது? ஆமாம், எவ்வளவு செலவாகும்!''


"250 ரூபாய் கட்டணும்மா!"


"நீ நிச்சமாய் போகலாம் மீனு. உனக்கு மறந்துபோய்டுச்சா- உன்னுேட சொந்தப் பணம் இருக்கே, நீ ஐஓபியிலே சேமிச்சுவச்சிருக்கியே!''


என் வகுப்பில் எனக்கு ஒரு தனிமதிப்பு. உல்லாசப் பயணச் செலவை நானே என் சொந்தப் பணத்தில் செலுத்தியுள்ளேன்.





# பகைவன் ஒழிக!


































*பல் எனாமலை அழித்து, வலிதரும் சொத்தையை உண்டாக்கும் கார்போக்ஸில் அமில வகையின் சூத்திரம்.

பல்லுக்கு உறுதி, பற்சிதைவுக்கு எதிரி —பினகா ்.ப்ளோரைட்.


க்ராக்ஜாக்-எவருக்குமே சபலம் தான்.
Krackjack
இதன் சுவை உப்பென்று
சாதிப்பவரும், இனிப்பென்று
வாதிப்பவரும், மனமுவந்து
சொல்வதோ ஆஹா,
பிரமாதம்!
உதிரி விற்பனை
இல்லை—
போலிகளைக்
கண்டு
ஏமாறாதீர்
பார்லே
everest/78/PP/